# கல்கி

22.2.2004

தென்றல்

சினிமா விமர்சனம் 24, 25



டாக்டர் கிருஷ்ணசாமிக்குப் பிடித்த சண்டியர்
(அறிந்து சொல்பவர் மொக்கராசு)
84, 85

திண்டுக்கல் வாசகர்கள் பக்கம்
26, 27



ரஜினி போட்ட தடை!
66, 67

மார்க் போடு தலைவா!
போட்டி-1 முடிவு
96



இவர், 'ஃபைவ் ஸ்டார்', 'திருடா திருடி' படங்களில் நடித்த கிருஷ்ணாவாச்சே! இவருக்கும் மினி கல்கிக்கும் என்ன சம்பந்தம்? புரட்டினா தெரிஞ்சுடும்!

# நடக்குமென்பார்; நடக்கும்!

## மேஷம்

- பண வசதி தாராளமாக இருக்கும்.
- புதிய முயற்சிகள் வெற்றி தரும்.
- கொடுக்கல் வாங்கல் சுமுகமா இருக்கும்.
- குடும்பத்தில் உற்சாகம் நிரம்பி வழியும்.
- வழக்கு விவகாரங்கள்ல நன்மை உண்டு.

## ரிஷபம்

- எடுத்த காரியங்களில் வெற்றி உண்டு.
- தொழில்களில் இதுவரை இருந்து வந்த சிக்கல்கள் மறையும்.
- வெளிநாட்டிலிருந்து நல்ல செய்தி வரும்.
- சுபகாரிய முயற்சி கூடிவரும்.
- பெண்களுக்குப் புதிய பொருள் சேர்க்கை உண்டு.



**டீ.வி. நடிகர் மோகன் ராமுக்கு (தனுசு) தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும்.**

## மிதுனம்

- திட்டமிட்டபடி காரியங்கள் நிறைவேறும்.
- எல்லோரும் பாராட்டும்படி ஏதாவது செய்வீங்க.
- வேலை விஷயமாக வெளியூர் போக வாய்ப்பு இருக்கு.
- கொடுக்கல் வாங்கல் கைகொடுக்கும்.
- குடும்பத்தில் உற்சாகமான சூழ்நிலை உண்டாகும்.
- சிலர் வீடு, மனை வாங்க வாய்ப்பிருக்கு.
- பணவசதி தேவைக்கேற்ப கிடைக்கும்.

## கடகம்

- பண நெருக்கடி அகலும். எதிர்பாராத பயணம் உண்டு.
- இதுவரை தாமதமான காரியம் கைகூடும்.
- புதிய முயற்சிகள் கை கூடும்.
- வியாபாரத்தில் முன்னேற்றம் உண்டு.
- கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ், பாராட்டு கிடைக்கும்.
- குருபலம் நிறைந்திருப்பதால் சுபமங்கள காரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு.

## சிம்மம்

- எதிர்பாராத பண வரவு உண்டு.
- வழக்கு விவகாரங்களில் வெற்றியுண்டு.
- அலுவலகத்தில் இதுவரையிருந்த தடைகள் விலகும்.
- தாமதமாகிவந்த பதவி உயர்வு வந்து சேரும்.
- அரசியல்வாதிகளுக்கு அனுகூலம் உண்டு.
- சிலர் வீடு, மனை வாங்க வாய்ப்பிருக்கு.

## கன்னி

- இதுவரை இருந்து வந்த தடைகள், சங்கடங்கள் நீங்கும்.
- துணிவு, தன்னம்பிக்கை அதிகரிக்கும்.
- புதிய முயற்சி கைகூடும்.
- வெளிநாட்டிலிருந்து நல்ல செய்தி தேடி வரும்.
- அரசியல்வாதிகளுக்கு ஆதாயம் கிடைக்கும்.
- எதிர்பாராத பண வரவு உண்டு. இருந்தாலும் செலவு கட்டுக்கடங்காது.
- கொடுக்கல் வாங்கல் கைகொடுக்கும்.

## துலாம்

- பிரிந்தவர்கள் ஒன்று சேருவார்கள்.
- புதியவங்க அறிமுகம் கிடைக்கும். அவங்களால நன்மை உண்டு.
- பிரச்னைகள், குறுக்கீடுகள் மறையும்.
- வரவேண்டிய பணம் வந்து சேரும்.
- சிலர் புது வீடு, வாகனம் வாங்க வாய்ப்பிருக்கு.
- கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு தேடிவரும்.
- கலைத்துறையினருக்கு அனுகூலமான வாரம்.

**அக்னிசர்மா பக்கம்**

**பிப்ரவரி 18 முதல் 24 வரை**

## விருச்சிகம்

- எதிர்ப்புகள் மறையும்.
- தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும்.
- புதிய வேலை முயற்சியில் வெற்றி உண்டு.
- கடன் தொல்லை குறையும்.
- வெளிநாட்டிலிருந்து நல்ல செய்தி வரும்.
- திருமண முயற்சிகள் வெற்றி தரும்.

## தனுசு

- புதிய பொறுப்புகள் தேடி வரப் போகுது.
- தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும்.
- வரவேண்டிய பணம் வந்து சேரும். கடன் தொல்லைகள் மறையும்.
- கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு.
- குடும்பத்தில் குதூகலமான சூழ்நிலை நிலவும்.
- கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்புத் தேடி வரும்.

## மகரம்

- பிரச்னைகள், குறுக்கீடுகள் எல்லாம் விலகும்.
- மறைமுக, நேர்முக எதிர்ப்புகள் மறையும்.
- எதிர்பார்த்த விஷயங்கள் இப்போது நடக்கும்.
- சிலர் புது வீடு, மனை வாங்க வாய்ப்பிருக்கு.
- பெண்கள் தங்கள் எண்ணம் ஈடேறப் பெறுவார்கள்.
- சினிமா, சங்கீதம் போன்ற கலைத் துறையைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் அடைவார்கள்.

## கும்பம்

- இதுவரை இருந்த குழப்பங்கள், குறுக்கீடுகள் மறையும்.
- பண வசதி தாராளமாக இருக்கும்.
- தாமதமடைந்த காரியங்கள் நிறைவேறும்.
- புதிய வேலை முயற்சிகளில் வெற்றி கிடைக்கும்.
- கூட்டுத் தொழில்களில் எதிர்பாராத லாபம் உண்டு.
- குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும்.
- குருபலம் நிறைந்து இருப்பதால் சுபமங்கள காரியங்கள் நிறைவேறும்.

## மீனம்

- இந்த வாரம் ஜாக்கிரதையா இருங்க. யாருக்கும் ஜாமீன் கையெழுத்துப் போட வேண்டாம்.
- பேச்சில் நிதானம் அவசியம்.
- உத்தியோகத்தில் சிறுசிறு பிரச்னைகள் ஏற்பட்டு விலகும்.
- கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை அவசியம்.
- குடும்பத்தில் எதிர்பாராத செலவுகள் ஏற்படும்.




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

டிஸ்மிஸ் செய்யப்பட்ட 999 அரசு ஊழியர்களை மீண்டும் உடனடியாகப் பணியில் சேர்த்துக் கொள்வதாக முதல்வர் சட்டமன்றத்தில் அறிவித்ததற்கு அடுத்த நாள், பாதிப்புக்கு உள்ளான ஊழியர்கள், கோட்டையில் பணியில் சேரத் திரண்டார்கள். 999 ஊழியர்களில் 530 ஊழியர்கள் கோட்டையில் பணிபுரிபவர்கள். ஏழு மாத காலம் அவர்கள் அனுபவித்த வேதனைகள், முகத்தில் அச்சாகப் பதிந்திருந்தன. மீண்டும் வேலை கிடைத்த சந்தோஷத்தை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளவே இன்னும் சில காலம் ஆகும் போலிருக்கிறது. "ஒவ்வொருவர் குடும்பச் சூழல் அப்படி ஸார்... ஏதோ பாராளுமன்றத் தேர்தல் வந்ததோ... தப்பித்தோம்... இல்லையேல் எங்கள் துன்பம் தொடர் கதையாக இருந்திருக்கும்" என்று சொன்னார் யூனியனின் தீவிரத் தோழர் ஒருவர்.

# மன்னித்தார் மகராசி!



* விசாரணைக்கு முன்பு

"கடந்த ஏழு மாத காலத்தைத் திரும்பிப் பார்ப்பது என்பது மனத்தை மட்டுமல்ல; உடலையும் பாதிக்கும் ஒரு விஷயம். வேலை பறிபோன வேதனையினிடையே, இந்தக் காலகட்டத்தில் நாற்பது பேர் இறந்து போயிருக்கிறார்கள்" என்கிறார் அந்த யூனியன் தோழர். "சரியாகச் சொல்வதானால், அரசு ஊழியர்கள் மற்றும் ஆசிரியர்களுக்குச் சோதனைக் காலம், ஜெ. ஆட்சிக்கு வந்த பின் துவங்கியது என்று சொல்லலாம். அரசு வருமானத்தில் தொண்ணூற்றியெட்டு சதவிகிதம் அரசு ஊழியர்கள், ஆசிரியர்கள் சம்பளத்துக்கே செலவாகிறது; இதன் காரணமாக வளர்ச்சிப் பணிகளுக்குப் பணம் ஒதுக்க முடியவில்லை என்று ஆளும் தரப்பு அடிக்கடி சொல்லி வந்தது. இதனைத் தொடர்ந்து போனஸ், அகவிலைப்படி, விடுப்புச் சம்பளம், பண்டிகை முன்பணம் ஆகியவை பறிக்கப்பட்டன. குதிரை கீழே தள்ளியது மட்டுமல்லாமல், குழியையும் பறித்த கதையாக, ஓய்வூதியத்திலும் கைவைக்கப்பட்டது. பணிக்கொடை பாதி பத்திரமாகவும், மீதி பணமாகவும் கொடுக்கப்படும் என்று அரசு சொன்னபோது, இடியாக இறங்கியது ஊழியர்கள் மீது. ஆர்ப்பாட்டம், உண்ணாவிரதம் என்று பல போராட்டங்களுக்குப் பிறகு, 2.7.2003 முதல் வேலை நிறுத்தம் செய்யப் போவதாக 23.4.2003 அன்று நோட்டீஸ் கொடுத்தார்கள் ஊழியர்கள். அதற்கு முந்தைய நாள் தான் அத்தியாவசியப் பணிகள் பராமரிப்புச் சட்டம் காலாவதி ஆகியிருந்தது.

அன்று இரவே முக்கியமான ஊழியர் சங்கப் பிரமுகர்களை வீடு புகுந்து கைது செய்தது போலீஸ். இதனால் வெறுப்படைந்த ஊழியர்கள் மாநிலம் முழுதும் ஜூலை ஒன்றாம் தேதியே அலுவலகங்களை பகிஷ்கரித்தார்கள். அதிலும் குறிப்பாக, தலைமைச் செயலகத்தில் யூனியன் தலைவர்களின் மேடைப் பேச்சு, ஆளும் கட்சியை மிகவும் கோபப்படச் செய்தது. அடுத்த நாள் வேலைநிறுத்தம் தொண்ணூறு சதவிகிதம் நடந்தது. நிலைமையின் விபரீதத்தைப் புரிந்து கொண்டு தனது நிலையை இன்னமும் கடினமாக்கியது தமிழக அரசு. விளைவு 1,76,000 ஊழியர்கள் டிஸ்மிஸ் செய்யப்பட்டார்கள். காலாவதியான டெஸ்மா சட்டத்துக்கு உயிர் கொடுக்கப்பட்டது. முப்பதாயிரம் ஊழியர்கள் மீது டெஸ்மா சட்டப்படி வழக்குகள் பதிவு செய்யப்பட்டன.

இந்தப் போராட்ட வரலாற்றில் முக்கிய





மான திருப்பங்களில் ஒன்று, கடந்த வருடம் ஜூலை ஐந்தாம் தேதி நீதிபதி பி.டி. தினகரன் அளித்த தீர்ப்பு. டெஸ்மா சட்டத்தை எதிர்த்து கோர்ட்டுக்குப் போனது ஊழியர் சங்கம் ஒன்று. "வேலை நிறுத்தத்தை வாபஸ் வாங்கிக் கொள்ளத் தயாரா?" என்று நீதிமன்றம் கேட்க, முக்கிய யூனியன் தலைவர்கள் சிறையிலிருந்த நிலையில், விளைவுகளைப் பற்றி கவலைப்படாமல் இரண்டாம் கட்டத் தலைவர்கள் 'சரி' என்று சொல்லி விட்டனர். நீதிபதி தினகரன், 'கைது செய்யப்பட்ட ஊழியர்களை உடனே விடுதலை செய்யச் சொன்னது மட்டுமல்லாமல், அரசின் டிஸ்மிஸ் கட்டளைக்கும் தடை கொடுத்து விட்டார். இது தவிர, புது ஊழியர்களை வேலைக்கு எடுப்பதற்கும் தடை போட்டார் நீதிபதி. அடுத்த ஒரு மணி நேரத்தில் தலைமை நீதிபதியின் வீட்டைத் தட்டினார் அட்வகேட் ஜெனரல் என்.ஆர். சந்திரன். தலைமை நீதிபதி, ஏற்கெனவே பிறப்பிக்கப் பட்ட கட்டளைகளுக்குத் தடை போட்டு விட்டு, வழக்கை விசாரணைக்கு எடுத்துக் கொண்டார். ஊழியர் சங்கங்கள் நம்பிக்கைக்கு வேட்டு வைத்த நாள் அது என்று சொல்லலாம். பின்னர் தலைமை நீதிபதியும், நீதிபதி கோவிந்தராஜனும் விசாரித்து 'அரசு ஊழியர்கள் தொடர்பான சர்வீஸ் மேட்டர்களைத் தீர்ப்பாயம் (Tribunal) தான் விசாரிக்க வேண்டும்' என்று சொல்லி விட்டார்கள்.

இதற்கிடையில் தற்காலிகப் பணிக்கு ஆள் எடுக்கும் வேலை, கோட்டையில் துவங்கியது. யூனியன் தலைவர்கள் 11.7.2003 அன்று வெளியே விடப்பட்டனர். விவகாரங்கள் சட்டச் சிக்கலில் மாட்டிக் கொண்டிருப்பது கண்டு, அவர்கள் நொந்து போனார்கள். சுப்ரீம் கோர்ட் ஆகஸ்ட் மாதம் தனது தீர்ப்பில், வேலை நிறுத்தம் செய்ய அரசு ஊழியர்களுக்கு உரிமை இல்லை என்று அடித்துச் சொன்னது மட்டுமல்லாமல், மூன்று ஓய்வு பெற்ற உயர்நீதிமன்ற நீதிபதிகளை வைத்து அரசு ஊழியர்களின் விவகாரத்தில் முடிவு காண வேண்டும் என்று சொன்னது. இது மற்றோர் அடி. சுப்ரீம் கோர்ட் சொன்ன மற்றொரு ஆறுதலான முடிவு, டெஸ்மா சட்டப் படி முதல் தகவல் அறிக்கை பதிவு செய்யப்படாத 1,56,000 ஊழியர்களை உடனே வேலையில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதுதான்.

அரசு ஊழியர்களின் அடுத்த கட்ட சட்டப் போராட்டம், மூன்று நீதிபதிகள் கொண்ட தீர்ப்பாயத்தின் முன் தொடர்ந்தது. தமிழகமெங்கும் டிஸ்மிஸ் செய்யப்பட்ட 6072 ஊழியர்களிடம் தனது விசாரணையைத் துவங்கியது. நீதிபதிகள் சம்பத், மலை சுப்பிரமணியன் மற்றும் தங்கவேலுவைக் கொண்ட தீர்ப்பாயம், ஏற்கெனவே உள்ள அரசு ஊழியர்களின் நன்னடத்தை விதிகள் அடிப்படையில் விசாரித்து தீர்ப்பு வழங்க வேண்டும் என்று சுப்ரீம் கோர்ட் வழிகாட்டியிருந்தது. அதன்படி, 4132 ஊழியர்களுக்குப் பணி மீண்டும் கிடைத்தாலும், மூன்று வருட இன்க்ரிமெண்ட் நிறுத்தி வைக்கப்பட்டது. அறுபத்தியாறு ஊழியர்கள்

பதவியிறக்கம் செய்யப்பட்டார்கள். 999 ஊழியர்கள் நிரந்தரமாக வீட்டுக்கு அனுப்பி வைக்கப்பட்டார்கள், ஆடிப் போயின ஊழியர் சங்கங்கள்.

கருணாநிதி, ஈ.வி.கே.எஸ். இளங்கோவன், நல்லக்கண் ஆகியோர், ஊழியர்களைத் தூண்டி விட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டு டெஸ்மா சட்டப்படி வழக்கும் பதிவு செய்யப் பட்டது. டிஸ்மிஸ் செய்யப்பட்ட 999 ஊழி யர்களின் கதியை நினைத்து கலங்கின ஊழியர் சங்கங்கள். அரசு அலுவலர் ஒன்றியத்தின் தலைவர் கோ. சூரிய மூர்த்தி, அரசுத் தரப் புடன் சுமுக உறவைக் கையாண்டு பிரச்னைக் குத் தீர்வு காண முனைந்தார். "ஒற்றுமையாக, எழுச்சியுடன் துவங்கிய போராட்டம் இது. ஆனால் படு தோல்வியில் முடிந்தது. காரணம், நாங்கள் சிறையிலிருந்த போது விவரம் தெரியாத சில இரண்டாம் கட்ட யூனியன் தலைவர்கள், விவகாரத்தை நீதிமன்றத்துக்கு எடுத்துச் சென்றதுதான். ஒன்று போராட்டத் தைத் தொடர்ந்து நடத்தியிருக்க வேண்டும். இல்லையேல், அரசுத் தரப்பைச் சந்தித்து வாபஸ் வாங்குவதாக அறிவித்திருக்க வேண் டும். நீதிமன்றத்துக்குச் சென்றிருக்க கூடாது. முதல்வரை அணுகி தீர்வு காண வேண்டும், என்ற எங்கள் அணுகு முறையே வெற்றி கண்டது" என்கிறார் சூரிய மூர்த்தி.

பாராளுமன்றத் தேர்தல் வருவதாலேயே அரசு கொஞ்சம் கீழே இறங்கி வந்து, ஊழியர்களை வேலைக்கு எடுத்துக் கொண் டிருப்பதை யூனியன் தலைவர்கள் உணர்ந் திருந்தாலும், அதைப் பற்றி வெளிப்படையாகப் பேசத் தயங்குகிறார்கள். "மிகச் சிறந்த நிர்வாகம் செய்கிறார் என்று சொல்லப்பட்டவர் ராஜஸ் தான் முதல்வர் அசோக் கெலாட். ஆனால் தேர்தலில் தோற்றுப் போனார். "என்னுடைய தோல்விக்கு முக்கியக் காரணம் 29000 அரசு ஊழியர்களை டிஸ்மிஸ் செய்ததுதான் என்றார். நன்றாக நிர்வாகம் செய்ததாகப் பாராட்டப் பட்ட கெலாட்டுக்கே இந்த நிலை என்றால்..." என்று நம்மிடம் ஒரு ஊழியர் சங்கத் தலைவர். ஊழியர் மீது அரசு எடுத்த நடவடிக்கைக்கு, பொதுமக்கள் மத்தியில் அமோக ஆதரவு என்று, ஆளுங்கட்சி தவிர பத்திரிகைகளும் பலமாக எழுதின. இருந்தும் மனமிரங்கி மன்னித்து, 999 ஊழியர்களை மீண்டும் பதவியில் அமர்த்தியிருக்கிறார் ஜெ.

அரசு ஊழியர்களின் வயிற்றெரிச்சல் மேலும் தொடருமானால், வோட்டு வங்கியில் இழப்புகளைச் சந்திக்க நேரிடும் என்ற அச்சத் தினாலும், 'இரக்கம் காட்டி பிரச்னையைத் தீர்க்க முயலவும்' என்று தோழமைக் கட்சியான பா.ஜ.க. வலியுறுத்தியதாலும் தான், முதல்வர் மனமிரங்கினார் என்கிறார்கள். இதற்கிடையில் அரசு ஊழியர்களின் சம்பளம், அரசு வருமானத்தில் ஐம்பத்தைந்து சதம் தான் என்று பட்ஜெட்டில் சொல்லியிருக்கிறார் பொன்னை யன். அடுத்த ஐந்தாண்டுகளில் இதை முப் பத்தியெட்டு சதமாக குறைக்கப் போவதாகவும் அவர் சொல்லியிருப்பதுதான் லேட்டஸ்ட் கலக்கல்.

- ப்ரியன்

அட்டை, படங்கள் : மீடியா ராமு

## நீடிக்கிறது, செப்.11 பீதி!

அமெரிக்காவிலுள்ள 115 விமான நிலையங்களிலும் 15 துறைமுகங்களிலும் புதிய பாதுகாப்பு முறையை அறிமுகப் படுத்தியுள்ளனர். இதன்படி அமெரிக்கா விற்கு வரும் வெளிநாட்டுப் பயணிகள் தாங்கள் விசா வாங்கும் தூதரகத்திலேயே தங்கள் கட்டை விரல் ரேகையை கம்ப்யூட்டரில், புகைப்படத்துடன் பதிவு செய்துவிட வேண்டும். அமெ ரிக்காவின் எந்த விமான நிலையம், துறைமுகம் மூலம் அவர்கள் வந்தாலும், இவை மீண்டும் கம்ப்யூட்டர் மூலம் பரிசோதிக்கப்பட்ட பின்னரே உள்ளே நுழைய அனுமதிக் கப்படுவார்கள்.

- பாரீஸ் பார்த்தசாரதி



# செய்திகள் திரிப்பது செம்பியன்!



“வெற்றிகரமான தோல்விக்கு வாழ்த்துகள்!”

“டிபிகல் செம்பியன் வாழ்த்தா இருக்கே” என்றார் கங்குலி.

‘நீங்கதானே சொல்லியிருக்கிங்க, ‘ஆஸ்திரேலியா உலகிலேயே சிறந்த டீம். அதனோடு ஆடி, ஒரு நாள் போட்டியிலே தோற்றாலும், டெஸ்ட் மாட்சுகள்ல அவர்களுக்கு நிகரா இருந்திருக்கோம்’னு.”

“அதுல என்ன தப்பு? நல்ல போலர்ஸ் மட்டும் அகப்பட்டிருந்தால் வெற்றிகளை அள்ளிக்கிட்டு வந்திருக்கமாட்டேனா!”

“அத்தைக்கு மீசை முளைச்சா கதையா இருக்கு. நல்ல போலர்ஸ் உருவாக என்ன செய்திருக்கிங்க?”

“என்னைக்கேட்டா? டால்மியாவிடம் போய்க் கேளு!”

“அவரிடம் கேட்க வேறு கேள்வியும் இருக்கு” என்று கூறி ஈமெய்ல் அனுப்பினேன்.

★ ★ ★

“பாகிஸ்தான் டூர் உண்டா இல்லையா?”

“பாதுகாப்புக்கு உத்தரவாதம் செய்யப்பட்டால் உண்டு.”

“ஏங்க, அங்கே சார்க் மாநாடே நடத்திக் காட்டியிருக்காங்க. அத்தனை நாடுகளோட தலைவர்களுக்கு பாதுகாப்புக் கொடுத்திருக்காங்க...”

“அது சரி, அங்கதானே முஷாரஃப் உயிருக்கே உலை வைக்கும் கொலை முயற்சியும் நடந்தது? குண்டு வெடித்தது!”

“அப்படிப் பார்க்கப்போனா இன்னிக்கு நூறு சதவிகிதம் பாதுகாப்பு உலகில் எந்த நாட்டில் கிடைக்கும்? பாகிஸ்தான் டூர் என்பது, அலை ஓய்ந்து சமுத்திர ஸ்நானம் செய்யும் கதையாகி விடும்.”

“இந்திய அரசே தேர்தல் முடியட்டும்னு யோசனை பண்ணுதே.”

“இன்றைய காபந்து இந்திய அரசுக்கு ஓட்டு ஒண்ணுதான் குறி..”

“அதை முஷாரஃப் கிட்ட சொல்லு. ‘இங்க, இந்திய கிரிக்கெட் வீரர்களுக்கு பாதுகாப்பு உறுதி’ன்னு அறிக்கை விட்டுச் சீண்டுவார்!’ ”

“அவர்கிட்ட சொல்ல வேண்டிய வேற விஷயங்களும் இருக்கு” என்று கூறி செல்லில் முஷாரஃபைச் சிக்க வைத்தேன்.

★ ★ ★

“ஸலாம்ஜி! பச்சைத் துரோகம் பண்ணினவருக்கு பொது மன்னிப்புத் தரலாமா நீங்க?”

“ஓ! ஏ.க்யூ. கானைச் சொல்றியா? என்னப்பா பண்றது? அணு வல்லரசாக பாகிஸ்தானை மாற்ற உதவியவராச்சே! அவருக்கு இங்க ரொம்ப மதிப்பு... மரியாதை...”

“இங்கன்னா...! அதாவது உங்களுக்கு அவர் கிட்ட ரொம்ப மதிப்புன்றீங்க... உங்களோட ஆசியுடன்தான் அணு ஆயுத ரகசியங்களை அவர் இதர நாடுகளுக்கு கிடைக்கச் செய்தார்னு...”

“பச்சைப் பொய்!”

“அப்படின்னா, அந்த துரோகம் நடக்காமல் தக்க சமயத்தில் நீங்க தடுத்திருக்கலாமே...”

“துரோகம் நடப்பதாக எனக்குத் தெரிஞ்சிருந்தா தடுத்திருப்பேன்... நிச்சயம்!”

“ஆனா, அமெரிக்கா வேற விதமா பேசுதே..!’ அணு ஆயுத ரகசியங்கள் பாகிஸ்தானிலிருந்து

ஏற்றுமதியாகுது'ன்னு உங்களை அப்பப்போ எச்சரித்து வந்ததாகத்தானே சொல்லுது...?"

"அமெரிக்கா கொடுக்கிற ஆயுதங்களை தட்டிக்கேட்டு வாங்கிக்கலாம்; அதுக்காக அவங்க அவிழ்த்து விடற புளுகு மூட்டைகளை ஏற்க முடியுமா?"

"உங்களை நம்பி அவங்க எப்படி, ஏன் செயல்படறாங்கன்றதே ஆச்சர்யம்தான்!"

"அதை அமெரிக்க அதிபரிடம் போய்க் கேளு!"

"அவரைக் கேட்க வேண்டிய வேறு மேட்டர்களும் இருக்கு" என்று கூறி, மல்டி என்ட்ரி விஸா, பாஸ்போர்ட் சகிதம் விமான நிலையம் சென்றேன்.

* * *

ஒயிட்ஹவுஸில் ஜார்ஜ் புஷ் கவலையை மறைத்துக் கொண்டு புன்னகை சிந்தினார்.

"ஜெர்ரி உங்களுக்கு கிலி கொடுத்துக் கிட்டிருக்கிறாராமே..."

"அவர் கட்சியில அவர் முன்னேறி வர முயற்சி பண்ணுறார். இந்தியா மாதிரி இங்க வாரிசு உரிமை, தலைவர் திணிப்பு எல்லாம் கிடையாது. முழுக்க முழுக்க உட்கட்சி ஜனநாயகம்தான். ஜெர்ரி இன்னும் பல படிகள் தாண்டி ஜனாதிபதி தேர்தலுக்கு அவர் கட்சி சார்பில் நிற்கட்டும். அப்ப கவனிச்சுக்கறேன், அவரை."

"அது சரி. ஆனா உங்க அப்பாவே 'ஜெர்ரி வளரும் வேகம், என் மகனுக்கு அனுகூலமாயில்லை'ன்னு கவலைப்பட்டுப் பேசியிருக்காரே..."

"வயசானவங்க அப்படித்தான் கவலைப்படுவாங்க, விட்டுத் தள்ளு..."

"அவரை விட்டுறலாம். ஆனா கிளிண்டன் - ஹில்லரியை சுளுவா விட்டுற முடியாது... ஸ்டில் வெரி யங்" என்று கூறி நியூயார்க் சென்றேன்.

* * *

"ஆழ்ந்த அனுதாபங்கள். எவ்வளவுதான் நீங்க தாங்குவீங்க. நேற்று மோனிகா, இன்று பெவிண்டா..."

"அந்த பாழாய்ப் போன



சுனடாக்காரி இவருக்கு என்ன சொக்குப்பொடி போட்டாளோ, தெரியலை, பல்லை இளிச்சுக்கிட்டு நிற்கிறார். அவள் அரசியல் முன்னேற்றத்துக்கு இவர் உதவறாராம்! இங்க நான் அமெரிக்காவின் முதல் பெண் ஜனாதிபதியாகணும்னு துடிச்சுக்கிட்டிருக்கேன். எனக்கு உதவாம, அந்தச் சிறுக்கிக்கு இவர் என்ன பாடுபடறது...? இந்த அசம்பாவிதத்துக்காகவும் நாளைக்கு பொது மன்னிப்புக் கோரி இவர் அறிக்கைவிட்டாலும் ஆச்சர்யமில்லை! கஷ்டம்!"

"அது எவ்வளவோ தேவலைங்க; எங்க நாட்டுல பகிரங்கமா தப்பு செய்தாக்கூட ஒப்புக்கவே மாட்டாங்க; சொத்தை வாதங்களை முன் வைப்பாங்க" என்று கூறிவிட்டு ஏர்-இந்தியா விமானம் ஏறினேன்.

★★★



✉ 'மினி கல்கி'யில் வெளியான 'சங்கரர் வழிபட்ட சந்திரமௌளீஸ்வரர்' அருமை. பூஜை தரிசனப் பெருமையை உணர்ந்தோம். மினி கல்கி, மேக்ஸியையே தோற்கடிக்கும் விதமாக அமைந்துள்ளது.

திருச்சி - 6, எஸ். மீனா

✉ "தாராளமா இடமிருந்திருந்தா அம்மாவைச் சுற்றி அங்கப் பிரதட்சணமே பண்ணியிருக்க மாட்டேனா...?" என்று அமைச்சர் வி.வி. சண்முகம் புலம்பியதாக செம்பியன் திரித்த செய்தி, குலுங்கிக் குலுங்கிச் சிரிக்க வைத்தது.

வேலூர் - 6, வே.ந. கதிர்வேல்

✉ கல்கியார் எப்போது காங்கிரசில் உறுப்பினரானார்? கதர்ச் சட்டைகளுக்கே இல்லாத கரிசனம், தலையங்கம் முழுவதும் தாண்டவமாடுகிறதே?

ஆதமங்கலம் புதூர், கே. சண்முகம்

✉ 'காங்கிரஸின் கௌரவத்தை மீட்டெடுங்கள்' தலையங்கம் தமிழக சான்றோரின் உளக் கருத்தை பிரதிபலிக்கின்றது. எத்தனைத் தொகுதிகள் என்பது அல்ல இன்றைய பிரச்னை. மீண்டும் பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தால்...? 'கல்கி' சுட்டிக் காட்டியது போல், அக்னிப் பரீட்சையாகவே மக்களவைத் தேர்தல் காணப்படுகின்றது.

சென்னை - 4, நந்தி அடிகள்

✉ வலுவான எதிர்க்கட்சி இருந்தால்தான் ஜனநாயகம் செழிப்பாகவும், ஆரோக்யமாகவும் இருக்கும். அந்த நோக்கில் பார்த்தால், காங்கிரஸ் இந்தத் தேர்தலில் தனது பழைய கௌரவத்தை மீட்க வேண்டியது மிகவும் அவசியம். இதோபதேசமாக எடுத்துக் கொள்ளலாம்.

சென்னை - 61, ஆர். நாகராஜன்

✉ சந்திரன் தனது இருபத்தேழு மனைவிகளில் அதிக அன்பு கொண்டது ரோஹிணியிடம் தானேயொழிய, நீங்கள் குறிப்பிட்டிருப்பது போல ரேவதியிடம் அல்ல.

சென்னை - 91, பாலா. சூர்யா

✉ புதுக்கவிதைகள் சிந்தையைச் சிலிர்க்க வைத்தன. பால. மூர்த்தி கவிதை போல நல்லதோர் கவிதைக்குக் கண்மூடும் சில நிமிடம்.

சென்னை - 78, வி.எஸ். அனந்தராமன்

✉ இரண்டே மாடுகள் பூட்டி, கூட்டணி வண்டியை ஜோராக கிளப்பிய வாழ்பாடியையும், மாடுகளை நுகத்தடிக்கு அழைத்து வரவே சிரமப்படும் கலைஞரையும், கார்ட்டூனில் கண்டு ரொம்பவே ரசித்தோம்!

ஸ்ரீரங்கம், எஸ். கௌரிலக்ஷ்மி

✉ 'ஒருத்தி' படம் பற்றி, "பொதுவாக தலித் கொடுமை என்றால், அவர்கள் வாழ்கிற குடிசைகளை எரிப்பது, அவர்களைத் தாக்குவது, மானபங்கப்படுத்துவது என்றெல்லாம் இருக்கும். ஆனால் இப்படத்தில் தலித் மீது சமூகம் கொண்டுள்ள மனரீதியான அடிப்படை வன்முறை பிரதானப்படுத்தப்பட்டுள்ளது" என்று நான் கூறியது, "தலித்துக்கள் மீதான பத்தொன்பதாம் நூற்றாண்டு வன்கொடுமை என்றால் அவர்களின் வீடுகளை எரிப்பது, தாக்குவது, மானபங்கப்படுத்துவது என்பதைத்தான் வரலாறு பதிவு செய்திருக்கிறது" என்று பிரசுரமாகியுள்ளது. சினிமா சித்திரிப்பு பற்றி நான் கூறியதை, வரலாற்றுப் பதிவு என்று மாற்றி எழுதியிருப்பது முற்றிலும் தவறானது.

(பின்னஞ்சலில் இயக்குனர் அம்ஷன்குமார்)

# மேக்ஸியை வென்ற மினி!

## வட்டமேஜை

# ஸ்ரீ டிராவல்ஸ்

194-A, அண்ணாசாலை, முதல் மாடி, ஆயிரம் விளக்கு, சென்னை - 600 006.
போன் : 28516799, 28513109, 28411522, 55870482
E-mail: sritrave@satyam.net.in. Website : www.sreetravels.com.

**உங்கள் குடும்பத்துடன் குதுகலமாக கழிக்க ஸ்ரீ டிராவல்ஸ் அளிக்கும் அற்புதமான சுற்றுலாக்கள்.**

கொளுத்தும் கோடையில் வெண்பனியில் விளையாடி மகிழும் சுற்றுலாக்கள்

## LTC வசதிகளுடன்

### சிம்லா - குலு - மணாலி சுற்றுலா

சென்னை - டில்லி - சண்டிகார் - சிம்லா - குலு - மணாலி - டில்லி-சென்னை.
பயணத் தொகை : ரூ.4,900/- + ரயில் டிக்கெட்
பயண நாட்கள் : 10 புறப்படும் தேதிகள் : ஏப்.24, மே 2,9,16,23,30
டில்லியில் A/c. ஹோட்டல் மற்றும் A/c. பஸ் வசதிகளுடன்
(WITH GOVT. TOURISM DELUXE BUSES)

### டார்ஜிலிங் - கேங்டாக் சுற்றுலா

சென்னை - கொல்கத்தா - டார்ஜிலிங் - கேங்டாக் - சென்னை.
பயணத் தொகை : ரூ.5,500/- + ரயில் டிக்கெட்
பயண நாட்கள் : 10 புறப்படும் தேதிகள்: ஏப்.30, மே 7,14,21, 28
கொல்கத்தாவில் A/c. ஹோட்டல் மற்றும் A/c. பஸ் வசதிகளுடன்

### பத்ரி - கேதார் சுற்றுலா

சென்னை - டில்லி - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - பத்ரிநாத் - கேதார்நாத் - டில்லி - சென்னை.
பயணத் தொகை : ரூ. 6,500/- பயண நாட்கள் : 11
புறப்படும் தேதி : மே 7,14, 21, 28
(பத்ரி - கேதார் பயணத்தின்போது பிரத்யேக படுக்கை வசதிகளுடன்)

**கங்கோத்ரி - யமுனோத்ரி**
பயணத் தொகை : ரூ. 8,500/- புறப்படும் தேதி : மே 21
(WITH GOVT. TOURISM DELUXE BUSES)

### 20 ஆண்டுகளுக்குப் பின் அமைதி தவழும் காஷ்மீர் பள்ளத்தாக்கினை கண்டு களியுங்கள்.

சென்னை-ஜம்மு-ஸ்ரீநகர்-பகல்காம்-குல்மார்க்-டில்லி-சென்னை.
பயணத் தொகை : ரூ. 6,900/- பயண நாட்கள் :10
புறப்படும் தேதி : மே 7,21
(WITH GOVT. TOURISM DELUXE BUSES)
பிரத்யேக சுற்றுலா : ஜம்மு-வைஷ்ணவி-அமிர்தசரஸ் தனிக்கட்டணம் நபருக்கு ரூ.600/-.

### அந்தமான் சுற்றுலா

சென்னை - போர்ட்பிளேயர் - சென்னை.
(கப்பல் பயணம் மற்றும் விமானப் பயணத்துடன் )
பயணத் தொகை : ரூ.13,900/- பயண நாட்கள் : 7
புறப்படும் தேதி : ஏப். 30 - மே 7, 14, 21

### A/c. பஸ்ஸில் காசி, கயா பக்தி சுற்றுலா

சென்னை - மதுரா - விருந்தாவன் - ஆக்ரா - நைம்சரன்யா - அயோத்யா - வாரணாசி - கயா - அலகாபாத் - டில்லி -சென்னை.
பயணத் தொகை : ரூ.6,500/- பயண நாட்கள் : 9
புறப்படும் தேதி : மே 2, 21
(WITH GOVT. TOURISM DELUXE A/C BUSES)

### இலங்கை சுற்றுலா

சென்னை/திருச்சி - கொழும்பு - கண்டி - கதிர்காமம் - திரிகோணமலை-நுவரெலியா-கொழும்பு-திருச்சி/சென்னை.
பயணத் தொகை : ரூ.18,900/- சென்னையிலிருந்து
ரூ.15,900/- திருச்சியிலிருந்து
பயண நாட்கள் : 5 இரவுகள் / 6 பகல்
புறப்படும் தேதி : ஏப். 28, மே 10, 22

### நேபாள், முக்திநாத் சுற்றுலா

சென்னை - கோரக்பூர் - போக்ரா - காத்மாண்டு - கோரக்பூர் - சென்னை.
பயணத் தொகை : ரூ.5,500/- நேபாள் மட்டும்
பயண நாட்கள் : 9 புறப்படும் தேதி : மே 8, 22
முக்திநாத் தரிசனம் : ஹெலிகாப்டர் மூலம் : ரூ.12,000/-
முக்திநாத் தரிசனம் : விமானம் மூலம் : ரூ.7,000/-

### சிங்கப்பூர் - மலேசியா சுற்றுலா

சென்னை - கோலாலம்பூர் - சிங்கப்பூர்- சென்னை.
பயணத் தொகை : ரூ.35,900/-
பயண நாட்கள் : 6 இரவுகள் / 7 பகல்
புறப்படும் தேதி : ஏப். 25 - மே 20
நட்சத்திர ஓட்டல்களில் தங்கும் வசதிகளுடன்

### கைலாஷ் - மானசரோவர் யாத்திரை

சென்னை - டில்லி - காத்மாண்டு - கைலாஷ் - மானசரோவர் - காத்மாண்டு - டில்லி - சென்னை
பயணத் தொகை : ரூ.58,000/- (டில்லி-காத்மாண்டு-டில்லி விமானப் பயணம்)
பயண நாட்கள் : 19 புறப்படும் தேதி : ஜூன் 6, ஜூலை 8
(யாத்திரை முழுவதும் வீடியோ எடுத்து அனைவருக்கும் சி.டி. தரப்படும்)

**8 பேர் அல்லது அதற்கு மேல் உள்ள குழுக்களுக்கு பிரத்யேக சுற்றுலாக்கள்.**
**பிரத்யேக வாகனங்களில்! நீங்கள் விரும்பும் தேதிகளில்**

| | ஒரு நபருக்கு |
|---|---|
| 1. சிம்லா-குலு-மணாலி-டில்லி | - ரூ.6,500 + ரயில் டிக்கெட் |
| 2. கல்கத்தா-டார்ஜிலிங்-கேங்டாக் | - ரூ.6,500 + ரயில் டிக்கெட் |
| 3. சென்னை-ஜெய்ப்பூர்-பிகானேர்-ஜெய்சல்மார்-ஜோத்பூர்-உதய்பூர்-மவுண்ட் அபு-அஜ்மீர்-புஷ்கர்-சென்னை | - ரூ.9,900 |
| 4. சென்னை-எர்ணாகுளம்-ஆலப்புழா-கோட்டயம்-மூணாறு-தேக்கடி-கொச்சி-எர்ணாகுளம்-சென்னை | - ரூ.4,800 |
| 5. சென்னை-கொடைக்கானல்-மூணாறு-சென்னை | - ரூ.3,900 |
| 6. சென்னை-கோவா-சென்னை | - ரூ.3,900 |
| 7. சென்னை-மைசூர்-சுப்ரமணியா-மூகாம்பிகா-சிருங்கேரி-தர்மசாலா-உடுப்பி-மெர்க்காரா-மைசூர்-சென்னை | - ரூ.4,800 |
| 8. சென்னை-மைசூர்-மெர்க்காரா-சென்னை | - ரூ.3,200 |
| 9. சென்னை-ஹைதராபாத்-அவுரங்காபாத்-எல்லோரா-ஷீரடி-மும்பாய்-சென்னை | - ரூ.4,800 |

**இந்தியா முழுவதும் ஓட்டல்களில் ரிசர்வ் செய்து தரப்படும்**
**கோடை நெரிசலைத் தவிர்க்க 60 நாட்களுக்கு முன்பே முன்பதிவு செய்யவும்**

# நினைவெல்லாம் நிவேதா!



தி.பழனிவேல்

நிவேதாக் குட்டியின் பிரிவால் வாழ்க்கையே வெறுமையாகிப் போன உணர்வு. இரண்டரை வருடப் பிணைப்பு. மனத்தின் அடி ஆழம் வரை நிரம்பி வழிகின்றாள். 'தாத்தா தாத்தா' என்ற அவளது செல்லக்குரல் ஒலித்துக் கொண்டே இருக்கின்றது.

வாசுதேவன் இரும்பு கேட்டின் தொக்கியை விலக்கினார்.

இந்நேரம் நிவேதாக்குட்டி இருந்தால், அவரது பைக் சத்தம் கேட்டவுடனேயே "தாத்தா வந்திட்டாரு, தாத்தா வந்திட்டாரு" என்றபடி தனது அம்மாவையோ, அவரது மனைவி கமலத்தையோ கையைப் பிடித்து இழுத்து வந்து விடுவாள்.

ஓர் ஆள் அவளைத் தூக்கிவிட அவள் தான் கொக்கியைத் திறக்க வேண்டும்.

அடர்ந்த செம்பருத்திச் செடியிலிருந்து காய்ந்த பூக்கள் உதிர்ந்து கிடந்தன. நிவேதாக் குட்டி, செடியில் ஒரு பூ பூக்க விடமாட்டாள்.

கதவு ஓரத்தில் உட்கார்ந்திருந்த கறுப்புப் பூனை விருட்டென்று ஏறிக் குதித்து ஓடியது. நிவேதாக் குட்டிக்கு ரொம்பப் பிடித்தமான பூனை. அவள் எவ்வளவு இம்சைப் படுத்தினாலும் அந்தப் பூனைக்குக் கோபமே வராது.

நிவேதாவின் அப்பா ரவிக்கு, வேலை மாறுதலாகி சென்னைக்குப் போய் விட்டது அந்தப் பூனைக்குத் தெரியாதோ என்னவோ?

பிள்ளையில்லையே என்று ஏங்கி, புழுங்கி, தகித்துப் போன வாசுதேவன் - கமலம் தம்பதியின் வாழ்க்கையை மெல்லிய நீர் விழுதுபோல வளமைப் படுத்தினாள்.

ஒரு வார காலம் ஆகிவிட்டது அவர்கள் போய்.

அவர்கள் வாடகைக்கு இருந்த வீட்டை காலி செய்து மினி லாரியில் சாமான்களை ஏற்றிக் கொண்டு போனபோது, தெரு முனை திரும்பும் வரையிலும் நிவேதாக் குட்டி இவர்களுக்கு டாட்டா காண்பித்துக் கொண்டு சென்ற காட்சி, மனத்திலேயே நின்றது.

வாசுதேவன் சாப்பிடாமலேயே படுத்து விட, பேசாமலேயே தூங்கிப் போனார்கள்.

"அண்ணாச்சி!"

திரும்பிப் பார்த்தார். பாத்திரக் கடைக்காரன் நடேசன் நின்று கொண்டிருந்தான்.

"வீடு காலியா இருக்கிறதா கேள்விப் பட்டேன்!"

"இம்..." என்று இழுத்தார்.

"வாடகையெல்லாம் கரெட்டா குடுத்திடுவாரு. அதுக்கு நா கேரண்டி!"

கையிலிருந்த பேப்பரை மடித்துக் கீழே போட்டார். கமலம் வாசல் கூட்டுவதை நிறுத்தி விட்டாள்.

"புருஷன், பொண்டாட்டி ரெண்டு வயசுல ஒரு பொண்ணு, மூணே பேருதான்!"

அவர் ஏதோ சொல்ல வாயெடுத்த பொழுது கமலம் இடையில் புகுந்து,

"வீடு வேற ஒருத்தருக்கு தர்றதா சொல்லி அட்வான்ஸ் வாங்கியாச்சு தம்பி!"

அவர் மனைவியைத் திரும்பிப் பார்த்தார். அவள் குனிந்து கூட்டிக் கொண்டிருந்தாள். பாத்திரக்கடைகாரன் போன பிறகு,

"ஏன் அவன்ட்ட அப்படிச் சொன்னே?"

"போதுங்க, போதும்!"

கமலம் விசும்பி அழத் தொடங்கினாள்.

பூலோகத்துல
சொர்க்கம்
படைப்போம்னு
சொன்னேனில்லே....

பிரும்மா
விஷ்ணு, சிவன்
எல்லாரும்
வந்திருக்காங்க,
நல்லா
கும்பிட்டுக்கோ....

## ஆட்சியாளர்களுக்காக ஆட்சியாளர்களே...!

நிதிநிலை அறிக்கையை சட்டசபையில் வாசித்து முடித்த இரண்டாம் நாளே கூட்டத் தொடர் முடிவடைகிறது! விவாதத்துக்கோ, மாற்றுக் கருத்துப் பதிவுக்கோ, நியாயமான அளவில் நேரம் அனுமதியாத வகையில், சட்டமன்றத்தின் நிகழ்ச்சி நிரல் தயாரிக்கப்படுகிறது. விவாதங்களுக்கு அவசியமின்றி, இது ஓர் இடைக்கால பட்ஜெட்டா என்றால், அதுவும் இல்லை. முழுமையான பட்ஜெட்தான். அவ்வாறிருக்க, பத்து - பதினைந்து நாள் வேண்டாம்; ஏழெட்டு நாட்களாவது விவாதத்துக்கு ஒதுக்க வேண்டாமா..? சட்டமன்றத்தில் தங்கள் கருத்தைக் கூற, எதிர்க்கட்சிகளுக்கு இடம் தராத இந்த வரலாறு காணாத நிகழ்வு, தமிழக அரசின் யதேச்சதிகாரப் போக்கை உணர்த்துவதாக ஆட்சேபித்து, எதிர்க்கட்சியினர் சட்ட சபைக்கு வராமல், நிதிநிலை அறிக்கையைப் புறக்கணிக்கின்றனர். இது குறித்து எந்தவொரு வருத்தமோ, சலனமோ இல்லாமல், தமிழக அரசு தன் வழியில் தொடர்கிறது.

இவ்வாறு, ஆட்சியாளர்களுக்காக ஆட்சியாளர்களே தயாரித்துக் கொண்ட பட்ஜெட்டில் மக்களுக்கு ஏதேனும் நன்மைகள் உண்டா என்று பார்த்தால், ஏமாற்றத்தைத் தவிர என்ன மிஞ்சும்?

கடந்த இரு ஆண்டுகளிலும் வரி மேல் வரிபோட்டு மக்களை துவம்ஸம் செய்த பட்ஜெட்கள் போலன்றி, இந்த பட்ஜெட்டில் புதிய வரிகள் இல்லை என்பது வாஸ்தவம்தான். ஆனால் மத்திய அரசைப் போலவே, தமிழக அரசும் தேர்தலை உத்தேசித்தே பட்ஜெட் தயாரித்திருக்கிறது. கடும் வறட்சியில் பாதிக்கப்பட்டுள்ள விவசாயக் குடிமக்களுக்குக் கடன் தள்ளுபடி, வரி நீக்கம் போன்ற தற்காலிக



# கல்கி



2004 பிப்ரவரி 22
சுபானு மாசி 10
மலர் : 62
இதழ் : 30

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




நிவாரணங்களும், தேர்தல் கண்கொண்டு செய்யப்பட்டுள்ள அறிவிப்புகள்தாம்.

இப்போதைக்குச் சற்று மூச்சு விட்டுக் கொள்ள உதவுவதாக இந்த அறிவிப்புகள் தோன்றக் கூடும். ஆனால், நீண்டகால நோக்கில், பயன்தரக்கூடிய ஒரு விஷயம் கூட இந்த பட்ஜெட்டில் இல்லை.

எய்ட்ஸுக்கான மருந்துகள் பேரில் விற்பனை வரி நீக்கம்; கம்ப்யூட்டர் உதிரி பாகங்கள் மீதான விற்பனை வரி குறைப்பு, போன்ற நடவடிக்கைகள் வரவேற்கத்தக்கன என்றாலும், பரவலாகப் பொருளாதாரம் வலுப்பெறவோ முன்னேறவோ இவை உதவாது.

பத்திரப் பதிவுக்கு வாங்க வேண்டிய முத்திரைத் தாளின் விலை விகிதம் குறைக்கப்பட்டிருப்பதும் சீர்திருத்தப்பட்டிருப்பதும் அன்றாட வாழ்வின் தரத்தை உயர்த்தாது.

ஒவ்வொரு கிராமத்திலும் மிக ஏழ்மையான இருபத்தைந்து குடும்பங்களுக்குச் சிறப்புத் திட்டம், பஞ்சாயத்துகளின் செயல்பாட்டினை அபிவிருத்தி செய்ய, 'நமது கிராமம்' திட்டம், போன்றவை சமுதாய நலத் திட்டங்களின் கீழ் வருவன. இவை எத்தனை தூரம் வெற்றி பெறும் என்பது மக்களின் விழிப்புணர்வைப் பொறுத்த விஷயம். இவற்றுக்கு ஒதுக்கப்படும் நிதி, 'புல்லுக்குப் பொசியாமல்' போய்ச் சேர வேண்டுமானால், அரசு அமைப்பு இத்திட்டங்களிலிருந்து தன்னை அகற்றிக் கொண்டு, என்.ஜி.ஓக்கள், சேவை மையங்களிடம் விட்டுவிடுவது உத்தமம்.

சிறு - மத்தியதர தொழில் முயற்சிகளுக்குத் தொழில் நுட்ப அபிவிருத்தி மையம் அமைக்கும் திட்டம் கருத்தளவில் வரவேற்கத்தக்கதுதான். ஆனால், சிறு தொழில்களுக்கு உதவ சிட்கோ, டான்ஸி, டிட்கோ போன்றவை இயங்கி வருகையில், இந்தப் புதிய மையத்தின் பணியும் பங்கும் என்ன என்ற கேள்வி எழுகிறது.

இந்தப் பணிகளுக்கெல்லாம் ஒதுக்கப்படும் நிதி எந்த அளவுக்கு உற்பத்திப் பெருக்கத்துக்கு உதவப் போகிறது? அந்த உற்பத்தி எப்போது விளைந்து, அரசு எப்போது வருவாய் பெறப் போகிறது? மூச்! இந்தக் கேள்விகளெல்லாம் தேர்தல் ஆண்டில் எழுப்பவே கூடாது!

தமிழக முதல்வர் இதை மக்கள் பட்ஜெட் (**People oriented budget**) என்று விவரித்திருக்கிறார். ஆனால் 140 கோடி ரூபாய் மதிப்புக்குப் புதிய சலுகைகள் அறிவிக்கப்பட்டுள்ளன




என்று அரசு பெருமைப்பட்டுக் கொள்ள முடியாது. இந்தச் சலுகைகளினால், ஏறிய விலைவாசி குறைந்துவிடுமா? வாழ்க்கைத் தரம் உயருமா? வேலை வாய்ப்பு அதிகரிக்குமா? என்று ஆராய வேண்டும். இந்தக் கேள்விகளுக்கு நிதிநிலை அறிக்கை எந்த பதிலும் சொல்லவில்லை; சொல்ல முடியாது... இந்த நிதிநிலை அறிக்கையால் இந்த நல்விளைவுகள் ஏற்படாது.

சரி, நல்விளைவுகள் இல்லாவிட்டால் போகிறது, பெரிய அளவில் வரி விதிப்போ, அதன் விளைவான பாதிப்போ, தீமையோ, சராசரி மக்களுக்கு இந்த பட்ஜெட் காரணமாக இல்லையே... என்று தோன்றக்கூடும். இந்தத் தோற்றமும் மாயைதான் என்பதை ஒரு சிறிய கணக்கு உணர்த்திவிடும்:

அடிப்படை வசதிப் பெருக்கத்துக்கான ஒதுக்கீடு 3335.01 கோடி ரூபாய்.

சமூகப் பணிகளுக்கான ஒதுக்கீடோ 5329.28 கோடி ரூபாய்.

வரிகள் நீக்கம், சலுகைகள் மூலம் அரசுக்கு வருவாய் இழப்பு 140 கோடி ரூபாய்.

பட்ஜெட்டில் துண்டு விழுகிற தொகை 590.47 கோடி ரூபாய்!

இந்தப் பற்றாக்குறை எவ்வாறு ஈடு செய்யப்படும் என்பது குறித்து, நிதியமைச்சரோ முதலமைச்சரோ எதுவும் கூறவில்லை. நிதி நிர்வாகம் மூலமாகவும், மத்திய அரசிடம் உதவி பெற்றும், இப்பற்றாக்குறை ஈடு செய்யப்படும் என, நிதிச் செயலர் மட்டும் பொதுப்படையாகக் கூறியிருக்கிறார்.

கடந்த சில ஆண்டுகளில் வரலாறு காணாத வகையில் அரசின் கட்டுப்பாட்டில் உள்ள பொருள்களுக்கு விலைகளை உயர்த்திய பின்னரும், மதுக்கடை வருமானம், மணல்குவாரி வருமானம் போன்றவை அரசுக்கு ஏக போகமாகிவிட்ட பின்னரும், இந்தப் பற்றாக்குறை என்பதை நாம் மறந்துவிடலாகாது.

590.47 கோடி பற்றாக்குறையுடன், உற்பத்திக்கு உதவாத இதர செலவினங்களும் சேரும் போது, அரசுக்கு நிதி நிர்வாகம் என்பது மிகவும் சிரமசாத்தியமாகிவிடும். தேர்தல் நடந்து முடியும் வரையில் பொன்னையன் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுத்துக் கொள்ளலாம்; ஆனால், தேர்தல் முடிந்த சில மாதங்களுக்குள்ளாகவே நேர்முக, மறைமுக வரிகளும், வசூல்களும், தமிழக மக்களின் தலையில் பெரும் சுமையாக அழுத்தும். இப்போது மயிலிறகாக வருடும் பட்ஜெட், பிற்பாடு சாட்டையடியாக விழுந்து மக்களைத் துன்புறுத்தும். ○

## குவிஸ் போட்டி (11) முடிவுகள்

ஆஹா! ரூ.10,000 பரிசு!

### குவிஸ் போட்டி-11 முடிவுகள்!

இந்த வாரம் குலுக்கல் மூலமாகப் பரிசு பெற்ற வாசகர் :

**ஏ. ஹாஜி,**
**4/2, மாரியம்மன் கோயில் தெரு,**
**கோடம்பாக்கம், சென்னை - 600 024.**

**ஆறுதல் பரிசாக ரூ.100 பெறுபவர்கள் :**

1. எஸ்.மயிலாத்தாள், பொள்ளாச்சி
2. எஸ்.எஸ். சண்முகவேல், கோவை - 6
3. வி. சிதம்பர நாதன், வீரவநல்லூர்
4. கே. லெட்சுமணன், நெல்லை - 11
5. சுகந்தா ஸ்ரீநிவாசன், கோவை - 25
6. பி.ஆர். ரவி, தஞ்சை
7. எஸ். கணேசன், பெருங்குடி
8. பி.கோவிந்தராஜன், சங்கர் நகர்
9. பி. ரவீந்திரன், ஆனைமலை
10. கே. வேலுச்சாமி, சிறுநாயக்கன்பட்டி
11. ச. மீனாட்சி ராஜன், சென்னை - 17
12. எஸ். மணிமேகலை செந்தில், கோட்டுச்சேரி
13. ம. இராமானுஜம், எடமலைப்பட்டி புதூர்
14. ஜி. அன்பழகன், லப்பப்பேட்டை
15. ப. தேவி, விஜயநகர்
16. ஏ.வி. சண்முகம், கொட்டாராம்
17. சத்தியலட்சுமி, தில்லைகங்கா நகர்
18. வ. சுடலை, புதுக்குடி
19. கே. அனுராதா, பொள்ளாச்சி
20. எச். ஹாஜா பீர்முகமது, மஞ்சக்குப்பம்




**குவிஸ் போட்டி - 11க்கான விடைகள்**

1. நடந்து முடிந்த சார்க் மாநாடு 2004க்குத் தலைமை தாங்கியவர் **பாக். பிரதமர் ஜாபருல்லாகான் ஜமாலி.**

2. கன்னியாகுமரியிலிருந்து புறப்படும் **ஹிம் சாகர் (ஜம்மு-தாவி)** எக்ஸ்பிரஸ்தான் இந்தியாவில் அதிக தூரமும், நேரமும் பயணம் செய்யும் ரயில்.

3. பறக்க முடியாத பறவை **கிவி / ஆஸ்ட்ரிச் / பென்குவின்.**

4. பெண்கள் காலில் (2வது விரலில் மெட்டிபோல) 3வது விரலில் அணியும் ஆபரணம் **மிஞ்சி.**

5. இந்தியாவின் முதல் ஏர்லைன்ஸ் **டாடா ஏர்லைன்ஸ்.**

6. நடிகர் சூர்யாவின் நிஜப் பெயர் **சரவணன்.**

## வாழ்த்துகள்!

சிரித்து வாழ வேண்டும்

# பீமன் கெடுத்திட்டான்!

## 29

மகாவிஷ்ணு நடிகர் பற்றி சொல்லிக் கொண்டிருந்தேன் இல்லையா? இதோ தொடர்கிறது...

மதியம், நடிக்க வேண்டிய காட்சிக்கு அவர் தயாரானார். வரிசையாக ஏழு கதவுகள் அடுத்தடுத்துத் திறக்க, உள்ளே மகாவிஷ்ணு சயனத்தில் இருக்கும் படியாக காட்சி ஆரம்பிக்க வேண்டும்.

டைரக்டர் 'ஸ்டார்ட்' சொன்னவுடன் கேமரா ஓட ஆரம்பித்தது. வரிசையாக ஒவ்வொரு கதவாகத் திறந்து கொண்டே வந்தது. ஏழாவது கதவு திறந்தவுடன்... டைரக்டருக்கு வந்ததே கோபம்... "கட்...கட்...கட்..." என்று கத்தினார்.

காரணம், கடைசிக் கதவு திறந்தபோது, சயனத்தில் இருக்க வேண்டிய மகாவிஷ்ணு, உட்கார்ந்து கொண்டு, தன் வேட்டியை சரிப்படுத்திக் கொண்டு இருந்தார். அதைப் பார்த்து நொந்து போய், காட்சிக்கு 'கட்' சொல்லிவிட்டு, "யாருய்யா இந்த ஆளைக் கூட்டிக்கிட்டு வந்தது. இந்த ஆளுக்கு கன்வேயன்ஸ், பேட்டா ஒண்ணும் தர வேணாம். இடத்தை காலி பண்ணச் சொல்லு" என்று சப்தம் போட்டார்.

அத்துடன் நிறுத்திக் கொண்டாரா? இல்லை... தொடர்ந்தார்... "எல்லாம் கெட்டுப் போச்சு. எவி.எம்மே கெட்டுப் போச்சு. பீமன் கெடுத்திட்டான்!" என்று கடிந்து கொண்டார்.

பஞ்சு அண்ணன் டைரக்ஷனில் முதல் படத்தில் நடித்தபோதே, என்னைப் பொருத்தவரை அவரது அணுகுமுறை சற்று வித்தியாசமானது. காட்சி என்ன என்பதை விளக்கிச் சொல்லிவிட்டு, "இதுதான் சீன்! உனக்கு முழுச் சுதந்திரம் கொடுத்துவிட்டேன். உனக்கு இந்த சீனில் எப்படி நடிக்கலாம் என்று தோன்றுகிறதோ, அப்படி நடித்துக் காட்டு பார்க்கலாம்!" என்றார்.

நான் நடித்துக் காட்டிய ஒவ்வொரு மூவ்மெண்ட், எக்ஸ்பிரஷனை 'பிரமாதம்... பிரில்லியன்ட்' என்று மனம் திறந்து பாராட்டினார். "அட! கற்பூரம் மாதிரி ஆளுய்யா நீ! இலேசாச் சொன்னால் போதும்! 'கப்'என்று பிடித்துக் கொண்டு, அதில்

நாகேஷ்

சொந்த சரக்கைச் சேர்த்து டெவலப் பண்ணி, பிரமாதமா நடிச்சிடறே! உனக்கு சின் எழுதறதும், உன்னை நடிக்க வைச்சு படம் பிடிக்கறதும் சந்தோஷமான விஷயம்" என்று பாராட்டியதை மறக்கவே முடியாது.

சர்வர் சுந்தரம்' படத்தின் போது, பல காட்சிகளில் "நாகேஷ்! நீயே புதுசா ஏதாவது பண்ணிக்காட்டு பார்க்கலாம்!'' என்று சொல்லி விடுவார். "மாருதிராவ்! நாகேஷ் என்ன செய்து காட்டினாலும் ஷூட் பண்ணிவிடு! தகுந்தாற்போல படத்தில் பயன்படுத்திக்கலாம்!'' என்று கேமரா மேனுக்குக் குறிப்பு கொடுத்து விடுவார்.

அதுவும் அந்தப் படத்தின் இறுதிக் கட்டத்தில் 'அவளுக்கென்ன அழகிய முகம்' என்று ஒரு பிரபலமான பாடலின் காட்சி களை எடுத்தபோது, நான் ஒரு ஸ்டைலில் நடந்து காட்ட, அதைப் படம் பிடித்துக் கொண்டார். பாராட்டினார். அடுத்து வேறு மாதிரியான ஸ்டைலில் நடந்து காட்டி னேன். ''அட! இதுவும் நல்லா இருக்கே! இதையும் ஷூட் பண்ணிடலாம்!'' என்றார்.


நன்றி: ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

அடுத்தபடியாக இன்னொரு ஸ்டைலில் நடந்து காட்டினேன். ''அட! இதுவும் பிரமாதமா இருக்குப்பா! மாருதிராவ், இதை யும் எடுத்துக்கோங்க!'' என்றார்.

''எல்லாமே ரொம்பப் பிரமாதமாய் இருக்கு! ஆனா எல்லாவற்றையும் படத்துல பயன்படுத்திக்க முடியாது. இப்ப என்ன பண்ணறதுன்னு மண்டையைப் பிச்சிக்க வெச்சிட்டியே!'' என்று சொல்லி கட்டிப் பிடித்துக் கொண்டார். நாங்கள் இரண்டு பேருமே நெகிழ்ந்து போனோம்.

இப்போது கோடம்பாக்கம் ரயில்வே மேம்பாலம் இருக்கிறதே அந்த இடத்தில், அந்தக் காலத்தில் மேம்பாலம் கிடையாது. ரயில்வே கேட்தான் இருக்கும். அதை 'பெரிய கேட்' என்று சொல்லுவார்கள்.

அதேபோல துரைசாமி சப்-வேக்கும், கோடம்பாக்கம் ரயில்வே ஸ்டேஷனுக்கும் இடையில் ஒரு ரயில்வே கேட் உண்டு. அதற்கு 'சின்னகேட்' என்று பெயர். பொது வாக பெரிய கேட்டில், வண்டிகளின் போக்குவரத்து அதிகமாக இருக்கும் என்பதால், அங்கே காத்திருக்கும் வாகனங் களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கும். ஆகவே, ஒரு சிலர், சின்ன கேட் வழியாகப் போவது உண்டு.

ஒரு நாள் நானும் நடிகர் முத்துராமனும் ஷூட்டிங்குக்காக, கம்பெனி அனுப்பி வைத்த காரில் ஸ்டுடியோவுக்குப் போய்க் கொண்டு இருந்தோம். சின்ன கேட் மூடி இருந்ததால், கதவு திறக்கும் வரை காரில் உட்கார்ந்து பேசியபடி காத்துக் கொண்டிருந்தோம்.

அப்போது, காருக்கு சற்றுத் தள்ளி பேப்பர் பொறுக்கும் பையன்கள் இருவர், எங்களைச் சுட்டிக் காட்டி ஏதோ பேசிக் கொண்டிருப்பதைக் கவனித்தேன். முத்துராமனுக்கு சைகைகாட்டி, பேச்சை நிறுத்தி விட்டு, வெளியில் அந்த இரண்டு பேரும் என்ன பேசுகிறார்கள் என்று கவனித்தோம்.

"அதோ கார்ல அந்தப் பக்கம் உட்கார்ந்திருக்காரே, அவரு எஸ்வி. சுப்பையா தானே?''

''டேய்! அவரு சுப்பையாவா? இல்லை இல்லை. அவரு தாண்டா முத்துராமன்.''

"நீ 'கலைக் கோவில்' படம் பார்த்தியா?''

"ஓ! பார்த்தேனே!''

"அதுல வருவாரே சுப்பையா? உனக்கு ஞாபகமில்லையா?''

"நான் சொல்லறேன், அது சுப்பையா தான். இல்லை... நான் சொல்லறேன், அவரு முத்துராமன்தான்."

"டேய்! நீ நெஞ்சில் ஓர் ஆலயம் பார்த்திருக்கியா?"

"நான் ஸ்ரீதர் படம் ஒண்ணு விடாம பார்த்திடுவேன் தெரியுமா?"

"நானும் தான் பார்த்திடுவேன். அதனால தான் சொல்லறேன், அவரு முத்துராமன்தான்."

நாங்கள் இரண்டு பேரும் சுவாரசியமாக அவர்களது உரையாடலைக் கேட்டுக் கொண்டு இருந்தோம். அடுத்தாற் போல வந்த வார்த்தைகள் எங்களை வாயடைத்துப் போக வைத்து விட்டன.

"டேய்! நீ நைட் ஷோ பார்த்திருப்பே! நான் பட்டப் பகல்ல மேட்னி ஷோ பார்த்தவன். நான் சொல்லறேன், அவரு சுப்பையாதான்!" என்றானே பார்க்கலாம்!

பக்கத்தில் உட்கார்ந்திருந்த முத்துராமன் முகத்தில் ஈயாடவில்லை.

அதற்குள் மணி அடிக்க, ரயில்வே கேட் திறந்தது. எங்கள் கார் புறப்பட்ட சமயம், அவர்களில் ஒருவன் இன்னொரு கமெண்ட் அடித்தான்.

"முத்துராமனை விடுடா. பக்கத்துல உட்கார்ந்திருக்குதே ஒண்ணு, அது எவ்வளவு சம்பாதிச்சாலும், மூஞ்சில சவக்களை தாண்டா!"

இந்த கமெண்ட்டை என்னால் சட்டென்று ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. கார் புறப்பட்டு விட்டது என்றாலும், தலையை வெளியே நீட்டி, "டேய்... டேய்... என்னடா சொன்னே?" என்று கத்தினேன்.

முத்துராமன் என்னைத் தட்டி, "எதுக்கு இப்படி கூப்பாடு போடறே! அவனுங்க இரண்டு பேரும், என்னை அவமானப் படுத்தறாப்போல, சுப்பையான்னு சொன்னப்போ, தமாஷ்னு ரசிச்சேயில்ல. இப்போ, உன்னைப் பத்தி ஒரு கமெண்ட் அடிச்சா, இவ்வளவு கோபம் வருதே! ஏன்?" என்றார்.

முத்துராமனின் கேள்வியில் இருந்த நியாயம் என்னைச் சிந்திக்க வைத்தது. அடுத்தவர் கேலி செய்யப்படுகிறபோது அதை ரசிக்கிற நாம், நம்மை வேறு ஒருவர் கேலி செய்கிறபோது, அதையும் ரசிக்காமல் கோபப்படுவது ஏன்?

(சிரிப்பு தொடரும்)



"வாம்மா... மாப்பிள்ளை சௌக்கியமா?"

"சௌக்கியம்தான் அம்மா! உங்களை ரொம்பக் கேட்டதா சொல்லச் சொன்னார்..."

"ரொம்பக் கேட்டா என்னால சமாளிக்க முடியாதும்மா; ஏதோ ஆயிரம் ரெண்டாயிரம்னா தந்து தொலைக்கிறேன்!"



"நீ என் காதலை ஏத்துக்கலைன்னா செத்துடுவேன்!"

"சரி... ஆனா, செத்ததுக்கப்புறம் பேய், பிசாசுனு வந்து என்னைத் தொந்தரவு பண்ணக் கூடாது!"

- இரா. புதுப்பட்டி ஜி.ஆர்.விஜய்

"என்னப்பா திடீர்னு இனிப்பு கொடுக்கிறே?"

"வருமானத்துக்கு அதிகமா சொத்து சேர்த்ததா என் மேலே போட்ட வழக்குல என் பக்கம் தீர்ப்பாயிடுச்சும்மா!"

- ராசு. லீலா விஜய்



**ம**ஹிமாவுக்கு அரசாங்கம் சொல்லும் பெண்களுக்கான திருமண வயது.

ஐந்தரை அடி குலோப் ஜாமூன். 'ஜெயம்' சதா சாயல். சிரிக்கும் போது இடுங்கும் கண்களில் இன்னமும் குழந்தைத் தனம். நுனியில் ரத்தம் தெரியும் சின்ன மூக்கு. மேலுதட்டின் இடது பக்கம் சிவப்பு மச்சம். சுலபத்தில் மறக்க இயலாத ஈர உதடுகள். புறாவுடையதைப் போன்ற மிருது கழுத்து.

மஹிமா நடந்தால் சுற்றியிருக்கும் காற்றில் அவள் வாசம் இருக்கும். மஹிமா நிழலுக்கு ஒதுங்கினால், கல்லூரியின் பவள முடிகளின் எண்ணிக்கை, அவளது கைனடிக் ஹோண்டாவின் மைலேஜ் போன்ற நுண்ணிய விபரங்கள் ஹரீஷுக்குத்தான் தெரியும்.

ஹரீஷ்..?

அதே கல்லூரி, அதே வகுப்பு, எம்.சி.ஏ.

மஹிமாவை மனத்தில் வைத்து ரசிப்பவன். 'நீ வராத நாட்களிலெல்லாம் பகலிலும் எனக்கு அமாவாசை' என்று உளறலாய் கவிதை எழுதுபவன். கல்லூரியில் சேர்ந்த தினத்திலிருந்து மஹிமா அணிந்த உடைகளின் வகை, வண்ணம் எல்லாம் தேதி வாரியாகக் குறிப்பு வைத்திருப்பவன். தற்செயலாகவோ, திட்டமிட்டோ அவளுடன் பேசிய வார்த்தைகளை ஒரு புள்ளி விடாமல் எழுதி வைத்திருப்பவன். மஹிமாவைப் புகைப்படம் எடுக்க முயன்று, முடியாமல், ஓர் ஓவியனிடம் வரையச் சொல்லி, அதிலும் திருப்தி வராமல், தானே ஓவியம் கற்று, ஆளுயர மஹிமாவை ஆயில் கலரில் அறையில் வைத்திருப்பவன்.

மஹிமாவுக்காக உருகுவதைவிட, ஹரீஷிடம் மற்ற திறமைகளும் உண்டு.

முதல் மாணவன். செமினார், குரூப் டிஸ்கஷன் போன்றவற்றில் புலி. செஸ் சாம்பியன். கிரிக்கெட்டில் ஆஃப் ஸ்பின்னர். அதிரடி பேட்ஸ்மேன். (மஹிமா வேடிக்கை பார்த்த ஒரு மேட்சில் ஒரே ஓவரில் இருபது ரன்கள் விளாசினான்.)

# நதியிலே நனையலாம்..

மல்லி மரங்கள் பூக்களை உதிர்க்கும்; பூவில்லா நேரங்களில் சருகுகளையேனும். மஹிமா தன் பற்களுக்கிடையில் கடித்தபடி நோட்ஸ் எழுதும் பேனா, அடிக்கடி காணாமல் போகும். மஹிமாவின் புத்தகங்களுக்குள் மாதத்துக்கு இரண்டு லவ் லெட்டரேனும் இருக்கும்.

மேலும்... மஹிமா உயிராய் வளர்க்கும் விரல் நகங்களின் நீளம், அவள் தலையிலிருந்து உதிர்ந்த ரோஜாவில் சிக்கியிருந்த

**ஒ**ரு வெள்ளிக் கிழமை காலையில், லேப் போகும் வழியில் அவளை நிறுத்தினான். கண்களில் கேள்வியுடன் நின்றாள். கூந்தல் உலர்ந்த நயகராவாய் காற்றில் அலைந்தது.

"உனக்கு ஒரு லெட்டர் வந்திருக்கு மஹி.." என்றான்.

"எனக்கு லெட்டரா...?" அழகிய கண்களால் ஆச்சரியித்தாள்.

"யார்ட்டேர்ந்து...?"

உடனடியாய் பதில் சொல்லாமல், அவள் வாங்கிய பிறகு, "எங்கிட்டேர்ந்துதான்.." என்றான்.

அவளிடம் நிறைய மாறுதல்கள். தயக்கமும் தடுமாற்றமுமாக, தன் இயல்பைத் தொலைத்து நின்றாள்.

ஹரீஷ் பேசினான்.

"அதுல என்ன எழுதியிருக்கேன்னு தனியா ஒரு தடவை சொல்ல விரும்பலை மஹி. இப்ப அதை உள்ள வெச்சிட்டு, லேபுக்கு போ. அப்புறமா நீயும் காத்தும் தனியா இருக்கற ஒரு அமைதியான சந்தர்ப்பத்துல படி. கோபமோ குழப்பமோ இல்லாம யோசி. என்ன வேணும்னாலும் பதில் சொல். ஆனா... பதில் சொல்.."




**ம**றுநாள் மஹிமா கல்லூரிக்கு வரவில்லை.

ஹரீஷ் பலதும் எண்ணி குழம்பிக் கிடந்தான். பாடத்திலோ, பிராக்டிகலிலோ கவனம் பதியவில்லை. நேரம் கொல்ல வழியில்லாமல் கிரிக்கெட் மைதானத்துக்குச் சென்றான். அவன் வீசிய முதல் பந்து, சிக்ஸருக்குப் பறந்தது. அவன் சந்தித்த முதல் பந்து மிடில் ஸ்டெம்பைத் தகர்த்தது. 'பணம் வாங்கிக் கொண்டு விளையாடுகிறாயா?' என்று சகாக்கள் கிண்டலடித்தார்கள்.

மதியம் மணி மூன்று.

அட்டெண்டர் பாலு, வந்து அழைத்தான். "ஹரீஷ்... உனக்கு ஃபோன்..."

'கல்லூரி நம்பருக்கு ஃபோனா...?' யோசனையாய் ஆஃபீஸ் வளாகத்துக்கு வந்து ரிஸீவரை எடுத்தான்.

ஆயிரம், லட்சம், கோடி அதிர்ச்சிகள்! இன்ப அதிர்ச்சிகள்!! மஹிமாதான் பேசினாள். "நளா ரெஸ்டாரண்டுல இருக்கேன் ஹரீஷ். இப்ப உங்களால வர முடியுமா...?"

'நீ நிலவுக்குக் கூப்பிட்டாலும் வருவேன் பெண்ணே...' மனதுக்குள் சொல்லிக் கொண்டான். புரொபஸரிடம் அனுமதி பெற்று, பைக் சிதறடித்துப் புறப்பட்டான்.

**நா**லாவது டேபிளில் உட்கார்ந்திருந்தாள். இவன் நுழைந்ததும் கை உயர்த்தி அருகழைத்தாள்.

பொங்கும் வியர்வையை ஏ.ஸி. உறிஞ்சிக் கொள்ளட்டும் என்று அப்படியே உட்கார்ந்தான்.

'வியர்க்குது உங்களுக்கு...' கர்ச்சீஃப் நீட்டினாள்.

"தேங்க்ஸ்..." வாங்கினான். உள்ளே மொடமொடவென்று காகிதச் சப்தம். குழப்பமாய் நிமிர்ந்தவனிடம் –

"என்னோட பதில்..."

என்றாள், புன்னகை செய்து.

உலக அவசரமாய்ப் பிரித்தான்.

ரோஜா வாசம் வீசிய காகிதத்தில் ஒற்றை வரியொன்று இருந்தது.

உணர்ச்சிகளின் வெள்ள வெளிச்சத்தில் கண்கள் கூசப் படித்தான்.

'எனக்கும் பிடிச்சிருக்கு.'

அமிர்தம் உண்ட தேவனைப்போல, கோடி ரூபாய் பரிசு பெற்ற ஆண்டியைப் போல, தானே வளர்த்த தோட்டத்தின் முதல் ரோஜாவைப் பார்த்து சந்தோஷிக்கும் சிறுவனைப்போல, ஆனந்தக் கூத் தாடினான் ஹரீஷ்.

''மஹி... மஹிம்மா... மஹிக்குட்டி... தேங்க்ஸ்டா... நா... நா...ச்சே... பேச முடியல என்னால..''

அவன் நிதானமாக இருந்தாள். ''அந்த லெட்டர்ல இன்னொரு விஷயமும் இருக்கு, கவனிங்க...'' என்றாள்.

'எனக்கும் பிடிச்சிருக்கு' என்ற வரிக்கு மேலே, காகிதத்தின் வலது மேல் ஓரத்தில் தேதி இருந்தது.

25.02.2007...!

''என்ன.. மஹி இது...? இன்னிலேர்ந்து மூணு வருஷம் கழிச்சி வர்ற தேதி போட்டிருக்க...?''

''ம்...'' என்றாள், இமைகளை மூடித் திறந்து. ''பிஸினெஸ்ல போஸ்ட் டேட்டட் செக் மாதிரி, இது போஸ்ட் டேட்டட் லவ் லெட்டர்...'' என்றாள்.

''புரியல எனக்கு...?'' மின்சாரம் நின்ற கம்ப்யூட்டர் திரையாய் இருண்டு உட்கார்ந் தான்.

''டென்ஷனாகாதீங்க ஹரி. எனக்கு இது வரைக்கும் எத்தனையோ லவ் லெட்டர் வந்திருக்கு. நா எதுக்குமே பதில் சொன்ன தில்லை. பட், உங்களை எனக்குப் பிடிச் சிருக்கு. உண்மையைச் சொல்லணும்னா, இத்தனை வருஷம் நானும் உங்களை ரகசியமா ரசிச்சிட்டுத்தான் இருந்தேன்...''

குழப்ப மேகங்கள் சூழ்ந்த முகத்துடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். ''அப்புறம் ஏன் தேதிக் குழப்பம்?'' கேட் டான்.

''வேர் மண் பிடிச்சப்புறந்தான் ஒரு செடிக்கு பூக்கிற உரிமை வருது ஹரீஷ். காதல்லயும் அதேதான். என்னால நீங் களோ, உங்களால நானோ, நம்ம பேரண்ட்ஸ்கிட்ட அவமானப்படக் கூடாதில்லையா...?''

''என்ன சொல்ல வர்ற நீ...?''

''நம்ம காதலை நம்ம பேரண்ட்ஸ் கோணத் துலேர்ந்து பாருங்கன்னு சொல்றேன்... ''காதலிக் கிறோங்கறதைத் தவிர, வேற என்ன தகுதி இருக்கு இப்ப நம்மகிட்ட...''

''இப்ப இல்ல தான். பட், கொஞ்ச நாள்ல...''

''கரெக்ட். நீங்க சொல்ற அந்த கொஞ்ச நாள்தான் நான் லெட்டர்ல எழுதியிருக்கிற மூணு வருஷமும். ''லவ் பண்றியா? சரி. பையன் என்ன பண்றான்?''ன்னு எங் கப்பா கேட்டா, நா தெளிவா, அழகா, கம்பீரமா பதில் சொல்லணும். அதே மாதிரி உங்க வீட்ல நீங்களும். அவங்க எந்த விதத் துலயும் மறுக்க முடியாத தகுதியோட காதலிக்கணும். அப்படியும் குலம், கோத்ரம்னு பேசி வீம்புக்கு அவங்க மறுத்தா, தைரியமா வெளிய வந்து வாழ்ந்து காட்டணும். அந்தத் தகுதியும் தைரியமும் நமக்கு வர்ற அந்த நாள்லதான், நாம காதல்ங்கற ஆதி நதியில கால் நனைக் கணும்...''

''கிரேட்...'' சிலிர்த்தான்.

''மூணு வருஷத்துக்குள்ள நீ சொன்ன தகுதியோட உன்னைச் சந்திப்பேன்...'' என்றான் ஹரீஷ், பிளாட்டின உறுதியுடன்.

''நான் காத்திருப்பேன்...'' என்றாள் மஹிமா, ரோஜாவின் மென்மையுடன்



''நேற்றுதான் கூட்டணியில சேரப் போவதா அறிவிச்சீங்க. அதுக்குள்ள உறவு முறிந்ததுனு அறிக்கை கொடுக் கறீங்களே?''

''அச்சச்சோ! தேர்தல் முடிஞ்சதுக்கு அப்புறம் கொடுக்கறதுக்காக வச்சிருந்த அறிக்கை அது. தவறுதலா முன்னமே கொடுத்துட்டேன்!''

- அஜித்லால்

# தென்றல்



'நீ... நீயாயிரு' என்று ஆட்டோகிராஃப் போட்டுக் கொடுக்கிறார் எழுத்தாளர் நலங்கிள்ளி. அதையே பின்பற்றுவது போல, அவருக்கு மானசிக மனைவியாக வாழ்ந்து காட்டும் நவீன ஆண்டாள்தான் (தாமரை) படத்தில் தென்றல்.

நாலுகாசு பார்க்கும் லட்சியத்தோடு (?), கற்புக்கும், தாலிக் கயிற்றுக்கும் காலங்காலமாய் தமிழ் சினிமாக்காரர்கள் போட்டு வைத்திருக்கும் போலி முடிச்சை அவிழ்த்து விடுகிறது தாமரை பாத்திரம்.

நலங்கிள்ளியோ, மக்கள் புரட்சியின் மகத்துவம் அறியாத மந்தகதியான மக்கள்மீது கடுங்கோபம் கொண்ட எழுத்தாளர். இன்னொரு பக்கம், மின்சாரம் வந்தபிறகு ஜன்னல்களை அடைத்துவிட்ட மனிதர்களுக்கு மத்தியில், அவற்றை அகலத் திறந்து, வானையும், நட்சத்திரங்களையும் ரசிக்கிற குளிர் நெஞ்சுக்காரர்.

இவர் வழியே காவிரிப் பிரச்னை, தமிழ் வழிபாடு, தமிழர் கலை என்று யாரும் தொடத்தயங்குகிற சீரியஸ் பிரச்னைகளை இயக்குனர் பேசும்போது, கொஞ்சம் பிரசாரம் போலத் தோன்றினாலும், பிசிறில்லாத திரைக்கதை என்பதால் பிரமாதமாய் எடுபடுகிறது.

வழி நெடுகிலும் முட்கள். இருந்தும் தனது காதலில் உறுதியாக இருக்கும் தாமரை, ஒரு கட்டத்தில் பொறுமையிழந்து சீற்றம் கொள்வது போன்ற சினிமாத்தனத்துக்கு பலியிட்டுவிடாமல், அந்தப் பாத்திரத்தின் கண்ணியத்தை, கடைசிவரை காப்பாற்றிவிடுகிறார் இயக்குனர்.

எதிர்பாராத தருணம். தனது இதய நாயகனைப் பார்த்த சிலிர்ப்பில் கட்டுண்டு, அவருக்குத் தன்னையே தந்து விடும் தாமரை. இதழ்களில் புன்னகையோடு நிற்க, எழுத்தாளரோ பணத்தை அவளது கைகளில் திணிக்கிறார். "அய்யோ! ஒரு பாலியல் தொழிலாளியாக அல்லவா நம்மை நினைத்திருக்கிறார்" என்று ஏமாற்றம், தவிப்பு இரண்டும் அழுத்த, படிக்கட்டுகளில் இறங்கி வருகிறார். அப்போது சுவரில் மாட்டப்பட்டிருக்கும் மர்மப் புன்னகை மோனோலிசா ஓவியத்தை கேமரா கடந்து வர, அந்தக் காட்சியின் எதிர்பாராத அதிர்ச்சியை ரசிகனுக்குள் அதிவேகமாகக் கடத்தி அசத்துகிறார் இயக்குனர்.

சாவுக்கு பறை இசைக்க மறுக்கும் தலித்துகள் மீதான தாக்குதலை, தூக்குக் கைதி குமாரின் வாழ்க்கையை ஒரு கனமான ஹைக்கூவாக காட்டும்போதும், அவரைப் போலவே 'இரத்தமெல்லாம் தீப்பிடிக்கிறது'. தியேட்டரில் படம் பார்க்கிற ரசிகர்களுக்கும்.

எரிந்துபோய் இடிபாடுகளாகக் கிடக்கும்

வீட்டில், துளிர்க்கும் நம்பிக்கையாக காய்த்துக் கிடக்கும் பூசணி. அரசு தாய் சேய் நலவிடுதியில் தங்கள் பச்சினம் குஞ்சுகளோடு, புதிதாய்ப் பிறந்த மழலைகளுக்கு மத்தியில் ஓடும் எலிகள். தேக்கிலைத் தொப்பி, பனையோலைக் காற்றாடி என்று தமிழ் அடையாளம் மிக்க காட்சித் துளிகளை அதிகம் பயன்படுத்தியிருப்பதில்,



தனித்துவம் காட்டுகிறார் ஒளி ஓவியர்.

கமர்ஷியல் நடிகன் என்கிற பளபள பிம்பத்தைக் கழற்றி வைத்துவிட்டு, கதாபாத்திரத்துக்குள் புகுந்து கொள்கிற வாய்ப்பு பார்த்திபனுக்கு... தாமரையாக வரும் உமா, ஜில்லென்ற இதமான வருடலோடு பாத்திரமாகவே ஒன்றிக் கரைந்துவிட்டிருக்கிறார்.

சிறுவன் இன்னி

வளவனாக, துடுக்கும் வெடுக்கும் நிறைந்த இயல்பான சோக உணர்ச்சியில் உருக்கும் அரவிந்தபச்சான், மனத்தில் தங்கிவிடுகிறான்.

எல்லாப் பாடல்களுக்கும் கதையோட்டத்தில் இயல்பான சூழ்நிலைகள் அமைந்துவிடுவதால், படத்தைக் காவியமாக்கும் முயற்சியில் பெரும் பங்காற்றியிருக்கிறது, வித்தியாசாகரின் இசைமொழி.

தமிழ் சினிமா போட்டு வைத்திருக்கும் சட்டம் ஒழுங்குச் சூத்திரங்களுக்குக் கட்டுப்படாமல், அதன் வியாபாரத் தந்திரங்களிலிருந்து தமது படைப்பை விடுவிக்க வேண்டும் என்ற தங்கர் பச்சானின் போராட்டம், புயலாக வீசியிருக்கிறது தென்றலில்.

**- விஷ்ணுவல்தாசன்**

○ ஃபெயில் ○ ஜஸ்ட் பாஸ்
○ ஆவரெஜ் ○ அபவ் ஆவரெஜ்
● டிஸ்டிங்ஷன்



## வியப்பூட்டு!

ஸ்ரீரங்கம் கோயிலுக்குப் பூட்டு,
தாழ்ப்பாள் வேண்டுமா?
விவேகானந்தர் நினைவுச் சின்னத்துக்கு
அலங்காரப் பூட்டு வேண்டுமா?
ஸ்டேட் பாங்குக்குப் பத்திரமான
பூட்டு வேண்டுமா?
இரயிலின் முதல் வகுப்பு வண்டிக்கு
நாகரீகமான பூட்டு வேண்டுமா?
எந்த ரகம் தேவை என்றாலும்
தயாரித்துத் தருகிறார்கள் திண்டுக்கல்
பூட்டுத் தொழில் நிறுவனத்தார்.

**- கிருபா ஸ்ரீனிவாசன்,**
**சேலம்**

## யானைத் தெப்பம்

**யா**னைத் தெப்பம். திண்டுக்கல்லில் புகழ்பெற்ற இடம். மதுரை ரோட்டில் உள்ள இந்தப் பகுதி வந்ததும் கண்டக்டர் 'யானைத் தெப்பம், யானைத் தெப்பம்'' என்று குரல் கொடுப்பார். திண்டுக்கல் ஒரு காலத்தில் திப்பு சுல்தானின் ஆட்சிக்குட்பட்டதாக இருந்தது. அரண்மனை யானைகளை நீராட்டுவதற்கென்றே ஒரு தெப்பக்குளம் கட்டியிருந்தார்களாம். தற்போது யானைகளும் இல்லை. தெப்பக் குளமும் இல்லை. பெயர் மட்டும் எஞ்சி நிற்கிறது.

**- இளங்கோ, மதுரை**




## தாமரைக் கோட்டை

**த**மிழ்நாட்டில் உள்ள மலைக் கோட்டைகளில் மிகப் பெரியது திண்டுக்கல் மலைக் கோட்டைதான். இதற்கு 'பத்மகிரி' என்ற பெயரும் உண்டு. தாமரை மொட்டு வடிவத்தில் அமைந்த கல் கோட்டை என்பதால், பத்மகிரி என்றும் அழைக்கப்படுகிறது.

- ஆர். ஜெகதாம்பாள்,
விருதுநகர்



# திண்டுக்கல் வாசகர்கள் கலக்கறாய்ங்க...



### பாரதிராஜாவின் செல்ல லொகேஷன்

திண்டுக்கல் மாவட்டத்திலேயே அழகான ஊர் வத்தலக்குண்டுதான்.

'வெற்றிலைக் குண்டு'தான் இதன் அசல் பெயர். நாளடைவில் மருவி, வத்தலக்குண்டானது. இந்த ஊரும் சுற்றியுள்ள மலைப் பகுதிகளும் கிராமத்து மண் வாசனை இயக்குநர் பாரதிராஜா படங்களில் நிறைய இடம் பெற்றுள்ளன.

'கமலாம்பாள் சரித்திரம்' எழுதினாரே பி.ஆர்.இராஜமய்யர், அவர் இந்த ஊர்தான்.

அந்த அக்ரஹாரத்தில் இன்னொரு ஜாம்பவான். அவர்தான் 'எழுத்து' இலக்கிய இதழின் ஆசிரியர் சி.சு. செல்லப்பா.

அவரது பெருமுயற்சியிலேதான் எழுபதுகளில் பி.ஆர். இராஜமய்யர் நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டது.

அந்தச் சமயம் தமிழ் எழுத்தாளர் மொத்தப் படையும் வத்தலக்குண்டில் கூடி நின்றது பெருமையிலும் பெருமை!

நடிகர் மேஜர் சுந்தர்ராஜன், அவர் தம்பி சம்பத்... இன்னும் சில நண்பர்கள் சேர்ந்து கேரம் விளையாடுவோம்... இவர்களுக்கு அக்ரஹாரம் - நடுத் தெருவில்தான் வீடு.

மேஜரின் அப்பா ஸ்ரீநிவாச அய்யங்கார் ஹெட்மாஸ்டராக வேலை பார்த்தது, வத்தலகுண்டு உயர் நிலைப் பள்ளியில்தான்.

'குழந்தையானந்த ஸ்வாமிகள் மடம்' வத்தலக் குண்டில் உள்ளது.

- ஷாபுதீன், மதுரை

மார்க் வாங்கலாம் வாங்க-7

# இதோ ஓர் அக்னி ஏவுகணை



பேருந்து நிலையத்தில் ஒரு பேருந்து நின்று கொண்டு இருக்கிறது. இன்னும் சிறிது நேரத்தில் அது புறப்படப் போகிறது. நன்றாக நாகரிகமாக ஆடை அணிந்த ஒரு மனிதர் அதில் ஏறுகிறார். சில நொடிகளில் பேருந்து புறப்பட்டது. நடத்துனர் ஒவ்வொரு பிரயாணியாக டிக்கெட் கொடுத்துக் கொண்டு வந்தார். இவரிடமும் வந்தார். இனி, இவர்களுக்கிடையே நடந்த உரையாடலைக் கேளுங்கள் :

**கண்டக்டர்** : சார்! எந்த ஊருக்குப் போகணும்?

**பிரயாணி** : (கண்டக்டரை மேலும் கீழும் பார்த்துக் கொண்டே) ஹூம்!

**கண்டக்டர்** : சார்! எந்த ஊருக்குப் போகணும்?

**பிரயாணி** : ஏதோ, ஓர் ஊருக்கு!

**கண்டக்டர்** : (சற்றே எரிச்சலுடன்) என்ன விளையாடுறீங்களா? ஒழுங்கா எந்த ஊருக்குப் போகணும்னு சொல்லுங்க!

**பிரயாணி** : ' அட! ஏதோ ஓர் ஊருக்கு.. சொன்னாப் புரியலையா?

இப்பொழுது பேருந்திலிருந்த அத்தனை பேரும் இந்த வினோதப் பிரயாணியைத் (பிராணியை?) திரும்பிப் பார்க்கிறார்கள். அவர்கள் முகத்தில் 'இது சரியான பைத்தியம்!' என்று ஏளனப் புன்னகை.

யார் இந்தப் பிரயாணி?... அவர் வேறு யாருமல்ல; நீங்கள்தான். அந்த பிரயாணிக்குப் போக வேண்டிய ஊர் தெரியவில்லை. பெரும்பாலான மனிதர்களுக்குத் தங்கள் வாழ்க்கை எப்படி இருக்க வேண்டும் என்ற குறிக்கோள் இல்லை.

சின்னச் சின்ன விஷயங்களில் - இந்த ஓட்டலுக்குப் போக வேண்டும், இந்த டிபன் சாப்பிட வேண்டும், இந்தத் ஷர்ட் / சுரிதார் வாங்க வேண்டும். ஏன், ஒரு திரைப்படத்துக்குப் போவதென்றால்கூட, இந்தப் படத்துக்குத்தான் போக வேண்டும் என்ற தெளிவான எண்ணம் - ஒரு குறிக்கோள் நமக்கு இருக்கிறது. ஆனால் வாழ்க்கையை நிர்ணயிக்கும் விஷயங்களில்...? காதுக்குச் செருப்பு வாங்க ஒரு மணி நேரம் செலவழிக்கும் நாம், அந்தச் செருப்பணிந்த கால்கள் போகும் பாதையைப் பற்றிச் சிந்திக்க

**▪ பேராசிரியர் ப.இராம்கோபால் ▪**

'இந்தப் பாடத்தில் இவ்வளவு மதிப்பெண்கள் வாங்க வேண்டும்!' என்று குறிக்கோளை நிர்ணயம் செய்து கொள்ளாமல் படிப்பது, முற்றிலும் பயனற்ற செயல். இப்படிப் படிக்கும் மாணவர்கள் எல்லாப் புத்தகங்களையும் 'முதல் அட்டையிலிருந்து கடைசி அட்டை வரை' படித்து விட்டு, 'எல்லாம் படித்து முடித்தாயிற்று' என்று ஒரு

ஒரு வினாடி கூட செலவழிப்பதில்லை.

குறிக்கோளற்ற மனிதர்களைப் பற்றி, 'தேடிச் சோறு நிதந் தின்று.. வீழும் வேடிக்கை மனிதர்!' என்று சாடுகிறார் பாரதி. குறிக்கோளற்ற வாழ்க்கை, குப்பை வாழ்க்கை என்பதை நாம் உணர வேண்டும். சரி, படிப்பதற்கும் குறிக்கோளுக்கும் என்ன சம்பந்தம்?

ஒவ்வொரு தேர்விலும், ஒவ்வொரு பாடத்திலும் எவ்வளவு மதிப்பெண்கள் வாங்குவது, என்று நீங்கள் நிர்ணயம் செய்து கொண்டு தான் படிக்கவே ஆரம்பிக்க வேண்டும். நீங்கள் நிர்ணயம் செய்து கொண்டுள்ள மதிப்பெண்கள்தான் உங்கள் குறிக்கோள். நீங்கள் சுமாராகப் படிப்பவராக இருந்தால், ஒரே முறையில் மிக அதிக மதிப்பெண்கள் பெறுவதை உங்கள் குறிக்கோளாக வைத்துக் கொள்ளாதீர்கள். இது நடைமுறையில் சாத்தியமல்ல. இதனால் உங்கள் தன்னம்பிக்கை குறைந்து, மனச் சோர்வு ஏற்படும். 'சின்னச் சின்ன அடியாக... சிகரங்களை நோக்கி' என்பதுதான் மிகச் சிறந்த வழி (உம்)

| தற்போது உங்கள் மதிப்பெண் இப்படி இருந்தால் | உங்கள் குறிக்கோள் இப்படி இருக்க வேண்டும் |
|---|---|
| 40 | 60 |
| 50 | 70 |
| 60 | 80 |
| 80 | 100 |

'சின்னச் சின்ன அடி'யாக என்பதைத் தவறாகப் புரிந்து கொண்டு, தற்போது உங்கள் மதிப்பெண் ஒரு குறிப்பிட்ட பாடத்தில் 40 ஆக இருந்தால், உங்கள் குறிக்கோளை 45 ஆக நிர்ணயம் செய்து கொள்ளாதீர்கள். அப்படிச் செய்தால் அதில் ஒரு சவால் இருக்காது. எனவே, மனத்தில் உற்சாகம் பிறக்காது. குறிக்கோள் எளிதில் அடைய முடியாததாக, அதே சமயம் சற்றே சிரமப்பட்டு அடையக் கூடியதாக இருக்க வேண்டும்.

ஒவ்வொரு தேர்விலும் படிப்படியாக உங்கள் குறிக்கோளை மதிப்பெண்களை அதிகப்படுத்துங்கள். இதற்காக ஒரு குறிக்கோள் பட்டியலைத் தயாரித்துக் கொள்ளுங்கள்.

# அடிப்போன அண்ணா!

சும்மா... ஒரு மாறுதலா இருக்கட்டும்னு விஜயகாந்த் நகைச்சுவை பக்கம் போய்ப் பார்த்தார். ஆனால் 'அசட்டு (எங்கள்) அண்ணா'வை அவரது அடிதடி ரசிகர்கள் விரும்பவில்லை. "எடுத்து, அடிச்சு, கிழிக்கிற காரெக்டர்தான் என் ரசிகர்களுக்குப் பிடிக்குது. அதனாலே மறுபடி ஆக்ஷன் அண்ணனா மாறப் போகிறேன்" என்று தடாலடியாக 'கஜேந்திரா' படப்பிடிப்பில் இறங்கிவிட்டார் கேப்டன்.

விஜயகாந்தின் ஜோடியாக நடிப்பதற்கென்றே மும்பையிலிருந்து பறந்து வந்திருக்கும் பஞ்சவர்ணக் கிளியின் பெயர் : லயா!



மயக்கத்தில் இருப்பார்கள். தேர்வுகள் நெருங்க நெருங்க மயக்கம் தெளியும். படித்தது எல்லாம் நினைவில் நிற்குமா என்ற அச்சமும், இந்தக் கேள்விக்கு இது விடையா, என்ற குழப்பமும் இவர்களை ஆக்கிரமித்துக் கொள்ளும். குழம்பிய மனத்துடன் தேர்வறையில் நுழையும் இப்படிப்பட்ட மாணவர்கள் இங்கொன்றும் அங்கொன்றுமாக, விடைகளை ஏதோ எறும்பு ஊர்வது போல் எழுதிவிட்டு, கசாப்புக் கடைக்குச் செல்லும் ஆடுபோல் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, தேர்வறையை விட்டு வெளியே வருவார்கள்.

இவ்வாறின்றி 'இந்தப் பாடத்தில் இவ்வளவு மதிப்பெண்கள் வாங்கியே தீர வேண்டும்' என்று குறிக்கோளை நிர்ணயம் செய்து கொண்டு படிப்பதால் விளையும் பயன்களைப் பாருங்கள்.

1. எவ்வளவு மதிப்பெண்கள் வாங்க வேண்டும் என்ற தெளிவு பிறக்கிறது.

2. இந்த மதிப்பெண்களை எப்படிப் பெறுவது என்று மனம் ஓயாமல் சிந்திக்கிறது.

3. இதன் காரணமாக எந்தெந்தப் பாடங்களைப் படிப்பது, அதில் என்ன மாதிரி வினாக்கள் வரும், அவற்றுக்கு விடைகள் எங்கே இருக்கின்றன. தேர்வுத்தாள் திருத்துபவர் மனம் கவரும் வண்ணம் அவற்றை எப்படி எழுதுவது, அதற்கு எவ்வளவு நேரம் பிடிக்கும் என்று உங்கள் மனம் பல கோணங்களிலும் சிந்திக்க ஆரம்பிக்கும்.

4. இந்த நிலை உங்களை ஓர் ஆராய்ச்சியாளராக மாற்ற, உங்களுக்கும், பாடங்களுக்கும் உள்ள இடைவெளி குறைந்து, பாடம் உங்களுக்கு ஒரு இனிய ஸ்நேகிதியாக ஸ்நேகிதனாக மாறும்.

5. குறிக்கோளைப் பற்றியே ஓயாது சிந்தித்துக் கொண்டிருப்பதால், உங்கள் கவனக் குவிப்புத்திறன் அதிகரிக்கும்.

6. குறிக்கோளை அடைந்தவுடன் - விரும்பிய மதிப்பெண்களைப் பெற்றவுடன் 'இது நம்மால் முடிந்திருக்கிறது. இனியும் நம்மால் அதிக மதிப்பெண்கள் வாங்க முடியும்' என்ற தன்னம்பிக்கை பிறக்கும்.

7. குறிக்கோளை நிர்ணயம் செய்து கொண்டு படிக்க ஆரம்பித்தீர்களானால், உங்களை எந்தத் தடையும் அசைக்க முடியாது.

தடைகள் அனைத்தையும் தூள்தூளாக்கும் அக்னி ஏவுகணைதான் குறிக்கோள்!

(தொடரும்)

"மஹாமகம் அன்று குளத்தை ஒரு முறை வணங்குவது 33 கோடி தேவர்களை வணங்குவதற்கு சமம்"

# 12 வருடங்களுக்கு ஒரு முறை நடைபெறும்
# கும்பகோணம் மஹாமகத்தில்
# 2004 மார்ச் 6 ந் தேதி அன்னதானம் செய்ய அழைக்கிறோம் !

**பேரன்புடையீர் ! வணக்கம். அருள்மிகு ஆதி கும்பேஸ்வரர் அருள்மிகு மங்களாம்பிகை தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

மஹாமகத்தன்று கும்பகோணம் காவிரி கரையில் அமைந்துள்ள ஸ்ரீ ராக வேந்திரரின் குரு ஸ்ரீ விஜயேந்திர சுவாமி பிருந்தாவன மடத்தில் நடைபெறும் அன்னதானத்தில் கலந்துகொண்டு மஹாமக குளத்தில் புனித நீராடி இறையருள் பெற அன்புடன் அழைக்கிறோம்.

## மஹாமகத்தில் அன்னதானம் செய்திட அரிய வாய்ப்பு !

ஆன்மீகம் தெய்வீக மாத இதழ் சார்பாக **ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்** தொடர்ந்து 5 ஆண்டுகளாக மாதா மாதம் அமாவாசையன்று **காசியிலும் இராமேஸ்வரத்திலும்** அன்னதானப்பணி செய்துவருகிறது. கும்ப கோணத்தில் நடைபெறும் மஹாமகத்தன்று ஆன்மீக அன்பர்கள் அனைவரும் **அமுதம் தேங்கியுள்ள மஹாமக குளத்தில் நீராடி** அன்னதானத்திற்கு நன்கொடை அளித்து அனைத்து தெய்வங்களின் அனுக்கிரகத்திற்கு பாத்திரர்களாகும் படி அனைவரையும் அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். ( ஐதீகம் : கங்கை, யமுனைநருமதை, சரஸ்வதி, காவேரி, கோதாவரி, துங்கபத்ரா, கிருஷ்ணா, சரயு) ஆக ஒன்பது நதி தீர்த்த தேவதை கன்னிகள் கலந்து கொள்ளும் நாள்.

புராண காலங்களுக்கு முற்பட்டதாக கருதப்படும் **அருள்மிகு ஆதி கும்பேஸ்வரர் அருள்மிகு மங்களாம்பிகை** அமர்ந்து அருளாட்சி செய்யும் கும்பகோணத்தில் **மார்ச் 6ந் தேதி மஹாமக குளத்தில் தீர்த்தவாரி** நடைபெறுகிறது. ஒன்பது ஜீவநதிகளும் ஒன்று சேர்ந்து கயிலாய மலை சென்று சிவபெருமானை வணங்கி எங்களிடத்தில் மிகப்பெரிய பாவங்களைச் செய்தவர்களும் நீராடி எல்லா பாவங்களையும் எங்களிடம் விட்டு விட்டு நற்கதியடைந்து வருகிறார்கள். எங்களிடம் விட்ட பாவங்களை நாங்கள் எங்கு சென்று போக்கிக் கொள்வது என்று கேட்டார்கள் அப்போது சிவ பெருமான் ஒன்பது நதி தேவதைகளிடம் கும்ப கோணத்தில் மஹாமகத்தன்று அங்குள்ள மஹாமக குளத்தில் நீராடுங்கள் உங்கள் பாவங்கள் அனைத்தும் உங்களை விட்டு விலகுவதோடு அவர்களிடமிருந்தும் பாவங்கள் விலகி விடும் என்றார். உடனே ஒன்பது நதிகளும் கன்னிகை வடிவெடுத்து கும்பகோணம் வந்து மஹாமகத்தில் வந்து **நீராடிய நாள் மஹாமகம்** ஆகும். மஹாமகம் என்பது குரு பகவான் சிம்ம இராசியில் இருக்க, சூரிய பகவான் கும்ப இராசியில் இருக்க, மாசி மாதத்தில் மகநட்சத்திரமும், பௌர்ணமி திதியும் சேரும் நாளே **மஹாமகம்** நாளாகும். இந்த நேரத்தில் மஹாமக குளத்தில் ரிஷிகளும், முனிவர்களும், முப்பத்து முக்கோடி தேவர்களும் நீராடுவார்கள் என்பது ஐதீகம். மஹாமகத்தன்று கங்கை முதலான அனைத்து தீர்த்தங்களும், மஹாமக தீர்த்தத்தில் குளித்துக்கொண்டிருப்பார்கள் எனவே மக தீர்த்தமாடினால் போதும் எல்லா நதிகளிலும் கிடைத்த புண்ணியத்தையும், முப்பத்து முக்கோடி தேவர்களின் ஆசியையும், ஆதி கும்பேஸ்வரர் அருளையும் பெறலாம்.

இந்த புண்ணிய நாளில் நீராடும் ஆன்மீக அன்பர்களுக்கு **ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்** மூலம் காவிரி கரையில் அமைந்துள்ள **ஸ்ரீ ராக வேந்திரரின் குரு ஸ்ரீ விஜயேந்திர சுவாமி பிருந்தாவன மடத்தில் எண் : 159, சோலையப்பன் தெரு, கும்பகோணத்தில் அன்னதானம்** நடைபெறுகிறது. 12 வருடத்திற்கு ஒரு முறை கும்பகோணத்தில், மஹாமகத்தன்று நடை பெறும் அன்னதானத்திற்கு தங்களால் முடிந்த அளவு நன்கொடை அளித்து அன்னதானத்தில் கலந்து கொண்டு மஹாமக குளத்தில் புனித நீராடி இறையருள் பெற வேண்டுகிறோம்.

**மஹாமகத்தன்று அன்னதானம் செய்ய தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.**

- **ரூ. 500 - அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் மூன்று மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**
- **ரூ. 1000 - அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**
- **ரூ. 5000 - அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஐந்து வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**

மஹாமகத்தன்று அன்னதானத்திற்கு நன்கொடையை அனுப்பியோர் தங்களுடைய வேண்டுதலையும், பிரார்த்தனையையும் தெரிவித்தால் அதற்கேற்ப அருள்மிகு கும்பேஸ்வரரிடம் பிரார்த்தனை செய்து மஹாமகத்தன்று அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ. 1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு அருள்மிகு ஆதி கும்பேஸ்வரர் அருள்மிகு மந்திர பீடேஸ்வரி மங்களாம்பிகை வண்ணப்படமும், மஹாமகத்தன்று பூஜிக்கப்பட்ட காமாட்சி அம்மன் விளக்கும் அனுப்பி வைக்கப்படும்.

இந்த அன்னதானத்திருப்பணி (திருக்கோயிலுக்கு உட்பட்டது அல்ல) ஆன்மீகம் இதழ் வாசகர்களுக்காகவும், அன்னதான சேவையில் கைங்கர்யத் தொண்டு புரிந்து வரும் அனைத்து அன்பர்களுக்காகவுமே நடத்தப்படுகிறது.

மஹாமகத்தன்று அன்னதான சேவையில் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை **Cheque / D. D/ M. O.** மூலம் **Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4** என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி அனைத்து தீர்த்தங்களின் புண்ணியத்தையும், முப்பத்து முக்கோடி தேவர்களின் ஆசியையும், அருள் மிகு ஆதி கும்பேஸ்வரர் பேரருளையும் பெறுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.


அருள்மிகு ஆதி கும்பேஸ்வரர்

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

**Cheque / D. D/ M. O.** அனுப்ப வேண்டிய முகவரி


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

TEL : 2495 9302, Fax : 044 - 5206 6525. E-mail:siva siva @ vsnl.net



அருள்மிகு மங்களாம்பிகை

மஹாமகத்தன்று அன்னதானம் செய்தால் 101 தலைமுறைக்கு புண்ணியம் கிடைக்கும்!







• மலையப்பன்

# நாய்கள் காப்பகம்!

நாய்களுக்குக் கனவுகள் இருக்குமா?

''ஏன் இருக்கக் கூடாது? மனுஷனை விட அறிவில் குறைந்ததா இருந்தாலும் மனசளவுல அது ஜீனியஸ். 'ஐயையோ கடிச்சிடும்' என்று பயந்தால் கடிக்கும். கடிக்க வர்ற நாயிடம் கையைக் கொடுத்துப் பாருங்க, கைகளை முகர்ந்து பார்க்க ஆரம்பிச்சுடும்'' என்கிறார்கள் மலையப்பனும், உஷா சிசரும்!

நாய்களுக்காக, நடமாடும் அழகு மற்றும் பராமரிப்பு நிலையம் ஒன்றை ஆரம்பித்திருக்கிறார்கள் இவர்கள்.

வீட்டிற்கே வந்து குளிப்பாட்டுவது, முடிவெட்டுவது, உண்ணிகளைக் களைவது, நகம் வெட்டுவது, காது பகுதியைச் சுத்தம் செய்வது, வாசனைத் திரவியங்கள் (நாய்களுக்குமா?) பூசுவது இவற்றோடு, இலவச கால்நடை மருத்துவமென அல்ட்ரா மாடர்னாக இருக்கிறது இந்த நிலையம்!

இதற்காக ஆஸ்திரேலியாவுக்குச் சென்று படித்துவிட்டு வந்திருக்கிறார் மலையப்பன்.

''நாய்களும் குழந்தைகள் மாதிரிதான். குழந்தைகளுக்கு என்னவெல்லாம் செய்கிறோமோ, அதையெல்லாம் நாய்களுக்கும் பண்ணணும். வெளிநாடுகள்ல மனுஷங்களுக்கு என்ன முக்கியத்துவம் கொடுக்கறாங்களோ, அதே அளவு 'பெட் அனிமல்'களுக்கும் கொடுக்கறாங்க. ஆனா இங்க இப்பத்தான் கொஞ்சம் கொஞ்சமாக அந்த உணர்வு வருது'' என்கிறார் இவர்.

நாய்களுக்காக இப்படியொரு நடமாடும் பராமரிப்பு நிலையம் இருப்பது, இந்தியாவிலேயே இதுதான் முதன் முறை என்கிறார் உஷா சிசர்!

''எங்க வீட்டு நாய்களைப் பராமரிக்க நினைச்சப்போ, சரியான வசதிகள் இங்க கிடைக்கலை. உடனேயே நாம ஏன் இப்படி ஆரம்பிக்கக் கூடாதுன்னு தோணுச்சு. இரண்டு வருஷமா இதுபற்றி யோசிச்சு, இருபது லட்ச ரூபாய் செலவில், குளுகுளு வசதி செய்யப்பட்ட இந்த வேனை இங்கேயே தயாரிச்சோம்'' என்கிறார் உஷா.

இவர்களின் அடுத்த இலக்கு, வெளிநாடுகளில் இருப்பது போல 'நாய்கள் காப்பகம்' ஆரம்பிப்பதாம்!

— மிஸ்டர் லீ.



# பசித்த புலி!

சமீபத்திய இதழில் அனரெக்ஸியா பற்றி எழுதியிருக்க, சிலர் தொலைபேசியில் 'நீங்கள் சாப்பிட மறுக்கிறவர்களைப் பற்றி எழுதியிருக்கிர்களே... சிலர் எப்போது பார்த்தாலும் சாப்பிட்டுக் கொண்டே இருக்கிறார்களே... அதனால் ஒண்ணும் பிரச்னை இல்லையா?' என்று கேட்டார்கள்.

பிரச்னைதான். சாப்பிட்டுக் கொண்டே இருப்பதும் ஒரு நோய்தான். பெயர் புலுமியா நெர்வோஸா! புரிகிற மாதிரி சொன்னால் 'பசித்த புலி'.

இந்த புலுமியாவும் சாப்பாட்டுக் குறைபாட்டு நோயில் வந்துவிடுகிறது. இந்த நோய் இருக்கிறவர்கள், 'மாயா பஜார்' ரங்காராவ் மாதிரி சாப்பிட்டுக் கொண்டே இருப்பார்கள். ஆனால் அதற்கு எதிராக, உடல் எடை கூடி விடாமல் இருக்கவும் கடும் முயற்சிகளை மேற்கொள்வார்கள். இதுவும் தெளிவாக விளக்க முடியாத நரம்பு மண்டலத்தின் சிக்கலான குறைபாடுதான். இந்த நோய் இருக்கிற நபர்கள் சில நேரம் எடை கூடிவிடக் கூடாது என்பதற்காக, விரலால் நோண்டி வாந்தியெடுக்கக் கூடச் செய்வார்கள். சிலர் வேண்டுமென்றே அடிக்கடி லேக்ஸேடிவ் என்கிற பேதி மருந்துகளைச் சாப்பிட்டு கிச்சனுக்கும் பாத்ரூமுக்கும் ரன் எடுப்பார்கள்.

இவர்கள் சுமாராக எத்தனை நாளைக்குச் சாப்பிடுவார்கள் என்று பார்த்தால், பயத்தில் கணக்கெடுத்தவருக்கு மயக்கம் வந்துவிட்டது. இருபது தடவை! புலுமியா புதல்வர்களைப் பெற்றெடுத்த பல கோடீஸ்வரர்கள், மளிகைக் கடைகளிலேயே செல்வத்தை இழந்திருக்கிறார்கள்.

இந்த புலுமியாக்காரர்கள் ஒரு முறை சாப்பிடும் உணவின் அளவு, நாம் சாப்பிடும் சராசரி அளவை விட ஐந்து மடங்கு அதிகமானது. தவிர, இதே அளவில் இருபது முறையும் சாப்பிட ஆரம்பித்துவிட்டார்கள்.

இப்படி பசித்த புலி ஒன்றை வயிற்றுக்குள் உலவ விட்டு வாழ்கிற புலுமியா நெர்வோஸா, அடிப்படையில் அனெரெக்ஸியாவில் இருந்து ஒரு முக்கிய விஷயத்தில் மாறுபட்டது. அது தன் நோய் பற்றிய கவனம். பொதுவாக



வஸந்த் செந்தில்

அனரெக்ஸியா நோயாளிகளைக் கண்டுபிடிப்பது கடினம். ஆனால் புலுமியா நோயுள்ளவர்கள் தங்களுக்கு இப்படி ஒரு குறைபாடு இருப்பதை உணர்ந்தே இருப்பார்கள். அவர்களுக்குப் பொதுவாகவே ஒரு பதற்றநிலையும், பாதுகாப்பற்ற நிலையும் இருக்கும்.

சரி... இவர்களுடைய மற்ற சிக்கல்கள் என்ன? அப்ஸெஷன் தான் மிக ஆதாரப் புள்ளி. திரும்பத் திரும்ப சமையலறைக் கூண்டுக்குள் சுற்றி வருவது. சிறிதுகூட கட்டுப்படுத்திக் கொள்ள முடியாத சாப்பிடும் உணர்வு. மன இறுக்கம். வாங்குகிற சம்பளத்தில் பெரும்பகுதியை சாப்பாட்டுக்குச் செலவழிப்பது. சாப்பிட்டுவிட்டு சாப்பிட்டுவிட்டு, டாய்லெட்டுக்கு ஓடுவது. உடல் எடை ஏற்ற இறக்கங்களோடு இருப்பது. சோர்வு. தசைத் தளர்வு. பெண்களாக இருந்தால், கருப்பையின் மாதச் சுழற்சியில் குறைபாடுகள். தலைவலி. இரத்த அழுத்தக் குறைவு. வெளுத்த நிறம்.

இந்தியாவின் மிக முக்கிய எப்பிடமாலஜிஸ்டுகளில் ஒருவரான ஸ்ரீதர் ஷர்மா, இப்போது பெருகிவிட்ட இந்த அனரெக்ஸியாவிற்கும், புலுமியாவிற்கும் ஆச்சரியப்படுகிறார். 1970களில் கண்டுபிடிக்க முடியாத இடத்தில் இருந்த இந்த உணவுக் கோளாறுகள், கருத்தரங்குகள் நடத்த வேண்டிய அளவிற்கு மலிந்துவிட்டன.

என்னதான் முடிவு என்றால், எல்லா மருத்துவர்களும் சைக்காட்ரிஸ்டுகளை நோக்கிக் கைகாட்டுகிறார்கள். ஹெல்ப்பிங் ஹேண்ட் அங்கேதான்.

நோயை விடுங்கள். குறைபாடு எல்லாம் அப்புறம். வீட்டில் இருக்கற பெரும்பாலான பெண்கள், சாப்பாடு மிச்சமாகி விடுகிறது என்று கவலைப்பட்டே இருப்பதை எல்லாம் சாப்பிட்டு பருத்து விட்டார்கள். என்ன செய்வது?

இதற்கும் பதில் அதேதான். நல்ல உணவுப் பழக்கம். கட்டுப்பாடான நிலை. கட்டாய உடற்பயிற்சி. கவனம் தவறினால் இடுப்பில் மட்டும் இருபது கிலோ ஏறிவிடுகிறது.

'சார், ஒரே ஒரு சான்ஸ் கூட இல்லையா? வழியே இல்லையா?' என்கிற உடல் எடை கூடுதல் நபர்களுக்கு, சமீபத்தில் அப்பல்லோ நல்ல தகவல் சொன்னது.

அமெரிக்காவின் சவுண்ட் ஷோர் மருத்துவமனையும், சென்னை அப்பல்லோவும் இணைந்து, 'பேரியாட்ரிக்' என்கிற உடல் எடை குறைப்பு அறுவை சிகிச்சையை அறிமுகப்படுத்தியுள்ளன. தங்கள் உடல் எடையை விட நூறு பவுண்ட் அதிகமாக உள்ளவர்கள், இந்தச் சிகிச்சையைப் பயன்படுத்தலாம்.

இதற்கு முன்னால் லேப்ரோஸ்கோப்பி முறையில் உடல் எடையைக் குறைத்தார்கள். இதில் ஒரே பெரும் சிக்கல். மறுபடியும் பழைய எடைக்கு பல நோயாளிகள் வந்து விடுவதுதான். ஆனால் மேற்சொன்ன புதிய சிகிச்சையில், வாழ்நாள் முழுக்க எடை கூடாமல் இருக்கலாம். சிகிச்சையில் நானூறு சி.சி. இடுப்பு, முப்பது சி.சி. யாக மாறும். கண் விழித்ததும் காணாமல் போன இடுப்பைத் தேடுகிற கவலையில்லாமல் எழுந்து வந்துவிடலாம். சிகிச்சையின்போது நோயாளியின் சிறுகுடலில் இரண்டு மீட்டர் பகுதி செயலிழக்கச் செய்யப்படும். இதனால் அந்த நோயாளி உணவு உட்கொள்ளும் அளவு கட்டுப்படுத்தப்படுகிறது. கைக்கு எட்டுகிற தூரத்தில் இருந்த சாப்பாடு, இரண்டு மீட்டர் தள்ளி வைக்கப்பட்டால், அப்புறம் எடை ஏறுவதாவது?

சிகிச்சை முடிந்த சில நிமிடங்களிலேயே நோயாளி எழுந்து நிற்கலாம். நடக்கலாம்.

நடக்க ஆரம்பித்த உடனே உங்களுக்கு வித்தியாசம் நன்றாகத் தெரியும்! எடை பயங்கரமாக குறைந்திருக்கும். பாக்கெட்டிலும் குறைந்திருக்கும். ஆம். செலவு மூன்றரை லட்சம் ரூபாய்!

(தொடரும்)

''அண்ணே நம்ம படத்துக்கு லேட்டஸ்டா ஒரு பஞ்ச் டயலாக்!''

''என்னது?''

''ஆத்தா கோழி வளர்த்தா, ஆனால் வைரஸ் வந்த கோழியை வளர்த்துட்டாளே!''

- தாம்பரம் பி.ஆர். கண்ணன்



# திண்டுக்கல்லின் போர்க்குரல்!



இவரது பெயரைக் கேட்டாலே பயந்து அலறுகின்றன பகாசுரக் கம்பெனிகள். குறட்டை விட்டுத் தூங்குவதாகக் குற்றம் சாட்டப்படும் மாசு கட்டுப்பாட்டு அமைப்புகள், இவரது வேகத்தைக் கண்டு பல்லைக் கடிக்கின்றன. ஐ.நாவின் பாராட்டுப் பத்திரம், பொருளாதார, மனித உரிமைக்கான பியான் விருது, லண்டன் பாடி ஷாப் நிறுவிய சர்வதேச மனித உரிமை விருது என, பாராட்டுகள் குவிகின்றன இவருக்கு. அவர் திண்டுக்கல்லைச் சேர்ந்த ஜே. பால்பாஸ்கர்.

சுற்றுச் சூழல் மற்றும் குழந்தைத் தொழிலாளர் உரிமைக்கான பாதுகாப்பை, கடந்த இருபது ஆண்டுகளாக முன்னெடுத்துச் செல்லும் தன்னார்வ அமைப்பான 'அமைதி அறக்கட்டளை'யை திண்டுக்கல்லில் நிறுவியவர். திண்டுக்கல் மாவட்டம் என்ற வட்டத்தோடு நின்றுவிடாமல், தேசம் தழுவிய சுற்றுச் சூழல் போராளியாகச் செயலாற்றும் பால் பாஸ்கர், இப்போது பொய் வழக்குகளால் அந்நியச் சிறையில் வாடும் கடல் கடந்த தமிழ்த் தொழிலாளர்களை மீட்கும் பணியிலும் இறங்கியிருக்கிறார். இதே போன்ற பிரச்னைக்காக, மாலத்தீவிலிருந்து திரும்பியிருந்த அவரைச் சென்னையில் சந்தித்தோம்.

''நமது நாட்டில் வேலையின்மையின் காரணமாக, இன்று கனவுகளோடு வெளிநாடுகளுக்கு வேலைக்குப் போகும் தொழிலாளர்களின் மனித உரிமைகள், அங்கே நசுக்கப்படுகின்றன. பாஸ்போர்ட், விசாவைப் பிடுங்கி வைத்துக் கொள்கிறார்கள். கொடூரமான கொலைக் குற்றங்களைக் கூட பொய் வழக்குகளாக உள்ளூர் போலீஸ் சுமத்தி விடுகிறார்கள். சிறையில் இருக்கும் செய்தி கூட பல வருடங்களுக்குப் பிறகு மிகத் தாமதமாக வந்து சேர்கிறது. விசாரணை என்ற பெயரில் கொடூரமான சித்திரவதைகள், மொழி பெயர்ப்பு வசதிகள் இல்லாமை, என்று சிறையிலேயே இறந்து போனவர்கள் ஏராளம்.

இப்படி வாடும் தமிழர்களை அந்த நாட்டுத் தூதரகங்களின் உதவியோடு மீட்கும் பணியைக் கையில் எடுத்துக் கொண்டிருக்கிறோம்.

இதற்கு ஐக்கிய நாடுகள் சபையின் சமூக, பொருளாதார கவுன்சில் உறுப்பினராக இருப்பது பேருதவியாக இருக்கிறது'' என்று சொல்லும் இவர், சுற்றுச் சூழல் விழிப்புணர்வுக்காக, 'புதிய கல்வி' மாதப் பத்திரிகையை வெளியிட்டு வருவது போலவே, இந்தப் பிரச்னைக்காக 'கடல் கடந்த தொழிலாளி' என்ற காலாண்டு இதழையும் வெளியிடுகிறார். தற்போது மாலத்தீவு சிறையில் வாடும் கமல், ராஜன், சரவணன் ஆகிய மூன்று தஞ்சை மாவட்ட தமிழ் இளைஞர்களை மீட்க, அந்நாட்டின் அதிபரிடம் கருணை மனு அளித்துத் திரும்பியிருக்கிறார்.

''மலேசியாவில் போதை மருந்து வழக்கில் பிணைக்கப்பட்டு, சிறையில் வாடிய பத்து தமிழ் இளைஞர்கள் விடுதலை செய்யப்பட்டது போல, இவர்களும் விரைவில் விடுதலை செய்யப்படுவார்கள்'' என்னும் பால் பாஸ்கர், ''ஒருங்கிணைந்த நீர்வடிப் பகுதி மேலாண்மைத் திட்டம்' என்ற இயற்கை வேளாண்மை செயல்திட்டத்தையும், திண்டுக்கல் மாவட்ட விவசாயிகள் மத்தியில் செயல்படுத்தி வருகிறார்.



# முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார்

28

# குறையொன்றுமில்லை

வேதமானது 'ஸதஸஸ்பதிம் அத்புதம்' என்று பகவானைக் கொண்டாடுகிறது. ஸபைக்கு - ஸதஸுக்கு - அதிபதியாக இருப்பவன் அவன்.

ஸதஸஸ்பதி என்றால்?...

நித்ய சூரிகள், முக்தாத்மாக்கள் எல்லோரும் வந்து ஸேவிக்கிற ஒரு பெரிய ஸதஸ் - வைகுண்டத்திலே... அதற்கெல்லாம் பதி யார் என்று கேட்டால், பகவான் நாராயணன்; அவனே அந்த அத்புதம் (அற்புதம்) என்று கூறுகிறது.

அவதார காலத்திலே, பகவானை - ஸ்ரீமன் நாராயணனை - உலகத்தவர்கள் அத்தனை பேரும் வணங்கி நின்று, ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். அவனே தான் தேவதைகளுக்குப் பதியாக இருக்கக் கூடியவன் என்பதனாலே, அவன் 'அத்புதன்' ஆகிறான்.

இதே அத்யத்புத சப்தத்தைக் கொண்டு தான் நரசிம்ஹனின் பிரபாவமும் சொல்லப்படுகிறது.

எப்பேர்ப்பட்டவன் அவன்...?

சூரியன் அவனுக்கு ஒரு நேத்திரம்; சந்திரன் இன்னொரு நேத்திரம். எம்பெருமான் நரசிம்ஹன் விசேஷமாய் மூன்றாவது நேத்திரத்தை நெற்றியிலே உடையவனாயிருக்கிறான்... அது மாத்திரமல்ல; ஸ்ரீதேவி, பூதேவி, நீளா தேவி என்று மூன்று திவ்ய மஹிஷிகளோடு எழுந்தருளியிருக்கிறான். அதனால் த்ரியம்பகன் என்று பெயர் அவனுக்கு. மூன்று பட்டமஹிஷிகள், மூன்று நேத்திரம் உடையவன்.

ம்ருத்யுஞ்சயன் அவன். *ம்ருத்யு ம்ருத்யுவே நம:* - ம்ருத்யுவுக்கு ம்ருத்யுவாக இருக்கக் கூடியவன்! அவனுடைய மந்திரத்திலே இது பிரசித்தமாய் வருகிறது. ஸ்தம்பத்திலிருந்து ஆவிர்பவித்தானே - ஹிரண்யனால் கட்டப்பட்ட அந்த ஸ்தம்பத்திலிருந்து ஆவிர்பவித்தானே, அவனை நம்முடைய ஆயுளுக்கும் அபிவிருத்திக்கும் காரணமாக இருக்கக் கூடியவன்' என்கிறது நரசிம்ஹ மந்திரம். பரிபூரண ஆயுளை நமக்குக் கொடுக்கக் கூடியவன். இவ்வாறு நரசிம்ஹனுடைய பிரபாவத்தை மந்திர சாஸ்திரமானது விசேஷமாக எடுத்துக் காட்டுகிறது.

மந்திர சாஸ்திரமானது நரசிம்ஹனைக் கொண்டாடுவதைப் போலவே யந்திர சாஸ்திரமும் அவனைக் கொண்டாடுகிறது :

நரசிம்ஹ மந்திரத்தின் பீஜாக்ஷரங்களைக் கொண்டு, யந்திரத்தைப் பிரதிஷ்டாபனம் பண்ணுகிறோம் - விசேஷமான முறையிலே அமைக்கிறோம். அந்த யந்திரத்தைச் சேதனம் பண்ணக் கூடிய - பேதிக்கக் கூடிய இன்னொரு யந்திரமோ, மந்திரமோ கிடையாது. நரசிம்ஹ யந்திரத்தைச் சபிக்க முடியாது; சேதனம் பண்ணமுடியாது. அப்படி சர்வதோ பத்ரமானது அது. சர்வத: பத்ரம் - எங்கும் பத்திரமாக இருக்கக் கூடியது.

நரசிம்ஹ மந்திரத்தினால் திக் பந்தனம் பண்ணி, நரசிம்ஹ மந்திரத்தினால் ஒரு யந்திரத்தைப் பிரதிஷ்டாபனம் பண்ணிவிட்டால், உள்ளே வேறு எதுவும் நுழைய முடியாது.

*உக்ரம் வீரம் மஹா விஷ்ணம்ஜ்வலந்தம் ஸர்வதோமுகம்*
*ந்ருஸிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யும்ருத்யும் நமாம்யஹம்*

என்று பதினொரு பதங்களோடு கூடிய, அனுஷ்டுப் சந்தஸ்ஸில் அமைந்த மந்திரம். மந்திர ராஜம் என்றே அதற்குப் பெயர். மந்திரம் அனைத்துக்கும் ராஜாவாக இருக்

கக் கூடியது இந்த மந்திரம். எல்லாவற்றைக் காட்டிலும் ஏற்றமுடையது. அதனால்தான் ஈச்வரனே அந்த நரசிம்ஹ மந்திரத்தை விளக்குகிறார். ஈசுவர சம்ஹிதை என்கிற சம்ஹிதையில் விளக்கிச் சொல்கிறார். மந்திர ராஜபத ஸ்தோத்திரம் என்கிற ஸ்தோத்திரமாகச் சொல்கிறார். திரிபதாசார்யர்களும் அங்கீகரித்த ஸ்தோத்திரம், நரசிம்ஹ ஸ்தோத்திரம். சில ஸ்தோத்திரங்களைச் சில பேர் அங்கீகரிப்பார்கள். வேறு சிலர் அவ்வளவு பகுமானமாகக் கொள்ள மாட்டார்கள். ஆனால் இந்த ஸ்தோத்திரம் இருக்கிறது பாருங்கள். மந்திர ராஜபத ஸ்தோத்திரம் - எல்லா ஆசார்யர்களாலும் அங்கீகரிக்கப்பட்டு, வியாக்யானங்களிலே எடுத்தாளப்பட்ட ஸ்தோத்திரம் அது. நரசிம்ஹ விபூதியிலே எல்லோருக்கும் ஈடுபாடு அதிகம்.

இங்கே ஈசுவரனே அவன் பிரபாவத்தை எடுத்துக் காட்டுகிறார் :

*உக்ரம் நமாம்யஹம்*
*வீரம் நமாம்யஹம்*
*மஹாவிஷ்ணும் நமாம்யஹம்*
*ஜ்வலந்தம் நமாம்யஹம்*
*சர்வதோமுகம் நமாம்யஹம்*
*ந்ருசிம்ஹம் நமாம்யஹம்*
*பீஷணம் நமாம்யஹம்*
*பத்ரம் நமாம்யஹம்*
*ம்ருத்யு ம்ருத்யும் நமாம்யஹம்*

என்று ஒன்பது பதங்களுடன் அவன் பிரபாவம் பேசி, நமாமி - அஹம் என்று இரண்டும் சேர, பதினொரு பதங்களோடு அமைந்திருக்கக் கூடிய இந்த மந்திரத்துக்கு ஈடு இணையே கிடையாது.

இந்த மந்திரத்தை ஜபம் பண்ணினால் ஏற்படக் கூடிய வைபவம், அவரவர்கள் அனுபவித்துத்தான் பார்க்க வேண்டும். ஈசுவரனாலேயே எடுத்துக்காட்டப்பட்டு, உயர்ந்ததாக இதிலே முப்பத்திரண்டு அக்ஷரம் இருக்கிறது.

நரசிம்ஹ தாபனீய உபநிஷத்திலே, பிரும்மாவைப் போய் எல்லா தேவதைகளும் கேட்டார்கள். "அந்த எம்பெருமானை இப்பொழுதும் நேரில் பிரத்யக்ஷமாகப் பார்க்க வேண்டுமானால், எதைச் சொல்ல வேண்டும்? எதைச் சொன்னால் அவன் நேரில் வருவான்?"

அதற்கு பிரும்மா பதில் சொல்கிறார் :

*'ந்ருசிம்ஹ பூர்வ தாபனீய உபநிஷத்*
*ந்ருசிம்ஹ உத்தர தாபனீய உபநிஷத்*
*'தாபனீய ரஹஸ்யானாம் ஸார:*
*காமாஸிகா ஹரி:" என்றார் சுவாமி தேசிகன்.*

## அருள்வாக்கு

பணத்துக்காக பகவானைப் பிரார்த்தனை பண்ணுவது தப்புதான். கஷ்டம் போகணும், வியாதி தீரணும் என்று பிரார்த்தனை பண்ணுவதுகூட அவிவேகம்தான். பகவானுக்காகவே பகவான் என்ற பிரேமையோடு செய்கிற பக்திதான் நிஜமான பக்தி. ஆனால் பகவானோ (கீதையில்) இப்படிப் பணத்துக்காகவும், கஷ்ட நிவ்ருத்திக்காகவும் பிரார்த்திக்கிறவர்களைக்கூட உயர்ந்தவர்கள் ("உதாரா:") என்கிறார். ஏன் அப்படிச் சொல்கிறாரென்றால், பிரார்த்தனை செய்வது,

'அந்த நரசிம்ஹ தாபனீய உபநிஷத்தினுடைய ஸாரமாக இருக்கக் கூடியவன், காஞ்சிபுரத்திலே வேளுக்கை என்கிற க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கிறான்' என்று நரசிம்ஹனைக் கொண்டாடுகிறார் சுவாமி தேசிகன்.

"அந்த முப்பத்திரண்டு அக்ஷரங்களோடு கூடிய மந்திரத்தில் அவனை தியானம் பண்ணுங்கள். திரும்பத் திரும்பச் சொல்லுங்கள். நேரில் நரசிம்ஹன் வந்து காட்சி கொடுப்பான்" என்றார் பிரும்மா.

இப்போதும் நாம் அந்த மந்திரத்தைச் சொன்னோமானால், எதிரிலே அவன் தென்படுவான். நரசிம்ஹனை நாம் பார்க்கலாம்.

முப்பத்திரண்டு அக்ஷரங்களைத் தனித்துத் தனித்துப் பிரித்து, அந்தந்த அக்ஷரங்களுக்குத் தேவதைகளைச் சொல்லி, அந்தந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியாய், சர்வாந்தர்யாமியாய் இருக்கக்கூடியவன் நரசிம்ஹன் என்பதை உணர்ந்து, யார் நித்யம் அத்யயனம் பண்ணுகிறார்களோ, சர்வ யக்ஞ பலனும் அவர்களுக்கு ஏற்பட்டுப் போகிறது. சர்வ கர்ம பந்தங்களிலிருந்தும் அவர்கள் விடுபடுகிறார்கள்' என்று இந்த மந்திரத்துக்குப் பலச்ருதி சொல்லப்பட்டிருக்கிறது.

நரசிம்ஹனுடைய அட்டகாசத்தைக் காட்டும் அவன் மந்திரமானது ஓரெழுத்து மந்திரமாக, முப்பத்திரண்டெழுத்து மந்திரமாக, நூற்றி முப்பத்திரண்டெழுத்து மந்திரமாக, ஆயிரத்து முப்பத்திரண்டு, பத்தாயிரத்து முப்பத்திரண்டு, ஒரு லட்சத்து நூற்றி முப்பத்திரண்டு... என்று விரிந்து கொண்டே போய் பலன் தரக் கூடியது. ஆகவே, நரசிம்ஹ மந்திரத்தைக் காட்டிலும்

எதுவோ ஒன்றுக்காக, பகவான் என்று ஒருத்தனை நினைப்பது, நம்மால் முடியாத ஒன்றைச் செய்கிற மஹா சக்தன் அவன் என்பதால், அவனிடம் வேண்டிக் கொள்வது இதிலேயே நம் வேண்டுதலை நிறைவேற்றி வைக்கும் அருள் மனஸ் அவனுக்கு உண்டு என்ற நம்பிக்கையும் இருக்கிறது) _ இப்படி அநேக நல்ல விஷயங்கள் பணத்துக்காகவும், கஷ்ட நிவ்ருத்திக்காகவும் பிரார்த்திப்பதில்கூட இருக்கத்தானே செய்கின்றன? அதனால் தான் இப்படிப் பிரார்த்திப்பவர்களையும் உசந்தவர்களாகச் சொன்னார். "ஏதோ ஒரு தினுஸில் என்னிடம் வந்து விட்டால் போதும். அப்புறம் ஸரியான தினுஸில் வரும்படியான பக்குவத்தை அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகத் தந்துவிடலாம்" என்று நினைத்துத்தான் அப்படிச் சொன்னார்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

சின்ன மந்திரம் இல்லை. நரசிம்ஹ மந்திரத்தைக் காட்டிலும் பெரிய மந்திரமும் இல்லை. 'அணோரணீயான், மஹதோ மஹீயான்' என்று, உபநிஷத் சொன்ன மாதிரி, சின்ன மந்திரத்தினுள்ளேயும் எம்பெருமான் இருக்கிறான்; பெரிய மந்திரத்தினுள்ளேயும் அவனே இருக்கிறான். மந்திர சாஸ்திரம், யந்திர சாஸ்திரம் யாவுமே அவனுக்கு உரியவை.

கேரள தேசத்திலே பார்க்கலாம். அங்கே தாந்திரிகம் அதிகம். தந்திரத்திலே பார்த்தால், நரசிம்ஹ தந்திரம் உயர்ந்தது.

லக்ஷ்மி தேவி, அவன் (நரசிம்ஹன்) கோபத்தை அடக்கிவிடக் கூடியவள். மற்றவர்கள் நெருங்க முடியாது. அவன் யோகத்தில் இருக்கிறபோது உள்ளே நுழையவே முடியாது.

கேரளத்திலே இந்த நரசிம்ஹ மூர்த்தி இப்படி யோகத்தில் இருந்தான். எம் பெருமானுடைய வலது கை கட்டை விரல் நகமிருக்கிறது பாருங்கள்... அது அவ்வளவு தேஜஸோடு இருக்கிறது; அவ்வளவு ஏற்றமுடையது. அந்த நகத்திலேயிருந்து வரக் கூடிய தேஜஸை யாராலும் தாங்க முடியவில்லை. நக நுனியிலே இருக்கும்படியான தேஜஸ் அத்தனையையும் ஒரு கும்பத்திலே ஆகர்ஷித்தார்கள். ஆகர்ஷண மந்திரம் என்று உண்டு. அதைச் சொல்லி, பிம்பத்தில் இருக்கிற தேஜஸைக் கும்பத்தில் மாற்றிவிட முடியும். கும்பத்தில் இருக்கிற தேஜஸை பிம்பத்திடம் சேர்க்க முடியும். ஆகம சாஸ்திரத்திலே இதை நாம் பார்க்கலாம்.

அந்த முறையிலே பிம்பத்தில் இருக்கிற சக்தியை கும்பத்தில் ஆவாஹனம் பண்ணி, திரும்ப பிம்பத்தில் சேர்ப்பதற்கு முன்னால் என்ன பண்ணினார்கள்... அந்த விக்ரஹத்திலிருந்து வெளிப்படும் தேஜஸை முழுமையாய்த் தாள முடியாது என்பதற்காக, அதை பின்னம் பண்ணினார்கள் - கட்டை விரல் நுனியில் கொஞ்சம் பின்னம் பண்ணிய பிறகு, அந்த விக்ரஹத்தில் அந்த தேஜஸை உட்புகுத்தினார்கள். அதற்கப்புறம் தான் எம்பெருமானுடைய தீக்ஷண்யம் குறைந்தது.

ஆகையினாலே நரசிம்ஹனுடைய வீர்யம் என்பது, கேவலம் அவதார காலத்தில் மட்டும் அல்ல... பிரதிஷ்டை பண்ணிய விக்ரஹத்திலும் வீர்யம் விசேஷமாக இருக்கிறது.

மஹா கோபத்தோடு பகவான் நரசிம்ஹனாக எழுந்தருளியிருந்தபோது, 'அதோ வருகிறான் உன்னுடைய பர்த்தா! நீ போய் கோப சமனம் பண்ணவேண்டும்' என்று பிரார்த்தித்தார்கள் மஹாலக்ஷ்மியிடம். தூரத்திலேயிருந்தே பார்த்தாளாம் மஹாலக்ஷ்மி! "இவர் என் அகத்துக்காரரே அல்ல!" என்று சொல்லிவிட்டாளாம். "இப்படி அவரை நான் பார்த்ததே இல்லை" என்று கிட்டே போகவே பயப்படுகிறாள்! அவதார காலத்திலேயிருந்த உக்ர ரூபத்தை மஹாலக்ஷ்மிக்கே நெருங்க முடியவில்லை என்றால், யாரால் முடியும்?...

பரம பக்தனான பிரஹலாதனால் மட்டுமே முடிந்தது. பிரஹலாதன் நெருங்கியபோது பகவான் அனுக்கிரஹம் பண்ணினான். அவ்வளவு கோபத்திலேயும் சீற்றத்திலேயும் அருள் செய்கிறான் பிரஹலாதனுக்கு... பக்தர்களுக்குப் பராதீனன் அவன் என்பதையே இந்த அவதாரத்தில் பார்க்கிறோம்.

(வளரும்)

Somnath

# பஞ்ச துவாரகா யாத்ரா

Dwaraka

## GUJARAT TOURISM






*(A Govt. of Gujarat Undertaking)*

Tourism Complex, Wallajah Road, Chennai - 600 002.

Tel No. 25366613, 28461113 Res : 24794159 E-mail : gujarattourism@vsnl.net

16 நாள் கொண்ட **புனித யாத்ராவில்** பார்க்கும் இடங்கள் - பரோடா, பாவாகாட், தாகோர் துவாரகா, துவாரகா, பெய்ட்துவாரகா, கங்கரோலி, சோம்நாத், ஜோதிர்லிங்கம், உதயப்பூர் மற்றும் சித்துபூர் (மாத்ருகயா), அம்பாஜி, மௌண்ட்அபு, புஷ்கர். கட்டணம் ரூ.10,750/- (AC டிரான்ஸ்போர்ட்) தேதி : 19.04.04

சென்னை - அகமதாபாத் மற்றும் திரும்புதல் நவஜீவன் எக்ஸ்பிரஸ் II SL மூலம். அகமதாபாத் மற்றும் இதர இடங்கள் சுற்றிப் பார்க்க - குஜராத் சுற்றுலாத்துறை சொகுசு பேருந்து ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

**இதர விவரங்களுக்கு Deputy Manager (Marketing) -ஐ மேலே குறிப்பிட்டுள்ள முகவரியில் தொடர்பு கொள்ளவும்.**

Amar Tours, Salem : Ph.2416647 or Cell : 9842713222 ★ Sree Sudha Travels, Bangalore : Ph.26529289, 94481 19290 ★ Travel Times, Coimbatore Ph : 25391542

---



# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

***முதியோர் சேவை பெரியது!***

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

### Charitable Trust (Reg)

**# 50 / 88, Panchali Amman Kovil Street, (Near Arumbakkam Post Office)**

**Arumbakkam, Chennai - 600 106 Tel. Off: 2475 5700, 2475 1356.**

**E-mail:svhome@vsnl.net**

பிப்ரவரி. 22-2004

மினி கல்கி

கௌரவ ஆலோசகர்கள்...

டாக்டர் கே. ஸ்ரீஸ்ரீதர்

டாக்டர் எஸ். அஷோக்

டாக்டர் எல். மகாதேவன்

சவேரா ஹோட்டல்ஸ் நீனா ரெட்டி

வழக்கறிஞர் கே. சுமதி

ஓவியர் மருது

டாக்டர் இரா. அன்புமணி

பேராசிரியர் கு. ஞானசம்பந்தம்

டாக்டர் தமிழிசை சௌந்தரராஜன்



# ஊதித் தள்ளுங்க ஆஸ்துமாவை...!

டாக்டர் கே.ஸ்ரீதர்



'எப்போ வருவேன், எப்படி வருவேன்னு சொல்ல முடியாது. ஆனா, வர வேண்டிய நேரத்துல, கரெக்டா வந்துடுவேன்'னு சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்த் மாதிரி, அலட்டலாய் ஒரு பஞ்ச் வைத்துத் தாக்கும் பிரச்னைதான் ஆஸ்துமா.

ஈளை, மாந்தம், அள்ளுமாந்தம், திகரடி, திகைப்பு, கணை, கணைச் சூடு என்று ஜில்லா வாரியாக விதவிதமாக ஆஸ்துமாவை அழைக்கிறார்கள். பெயரில் என்ன இருக்கிறது? எல்லாமே மல்லுக்கட்டி கஷ்டப்பட வேண்டிய விஷயம்தான்.

'ஆஸ்துமா' என்பது கிரேக்க வார்த்தை. இதற்கு மூச்சுத் திணறல் என்று பொருள். ''மூச்சுக் காற்றுக்காக, ஏங்கி ஏங்கி திணறுவதுதான் ஆஸ்துமா'' என்கிறார் ஹிப்போகிரேடஸ்.

## மூச்சு வாங்குவது ஏன்?

கூவம் நதியைக் கடக்கும்போது, மூக்கைப் பொத்திக் கொண்டு அவஸ்தைப் படுகிறோமே... அப்போது மூச்சு வாங்கும். மாநகராட்சிப் பணியாளர்கள் பெருக்கும்போது எழும் பெரும் தூசியிலிருந்து தப்பிக்க, குடுகுடு என்று ஓடி வந்தாலும் மூச்சு வாங்கும். காதலி ஏறிவிட்ட ரயிலைப் பிடிக்க, படி ஏறி 'தபதப' என்று இறங்கி வந்தாலும் மூச்சு வாங்கும். ஆஸ்துமா என்றாலும் மூச்சு வாங்கும். ஆனால் இவை எல்லாம் ஒன்றல்ல!

ஆஸ்துமாவினால் வரும் மூச்சு வாங்குதலும் இன்ன பிற காரணங்களால் வரும் மூச்சு வாங்குதலும் வேறு வேறு... கட்சிக்காக நன்கொடை வாங்குவதும், சொந்த லாக்கருக்காக கமிஷன் வாங்குவதும் மாதிரி, வேறு வேறு! இதை இனம் பிரித்துக் காட்டியவர் டாக்டர் வான்னி.




மூச்சுப் பெருங்குழாய்க்கு ஆங்கிலத்தில் 'ட்ராக்கியா' (Trachea) என்று பெயர். கிட்டத்தட்ட பன்னிரண்டு சென்டிமீட்டர் நீளம் இருக்கும். இது இரண்டாகப் பிரிந்து, இடது பக்க நுரையீரலுக்கு ஒரு குழாயும், வலது பக்க நுரையீரலுக்கு ஒரு குழாயும் போகிறது. இடது பக்கம் போவது லெஃப்ட்

ப்ரான்கஸ்; வலது பக்கம் போவது ரைட் ப்ரான்கஸ்.

கிளைகளாகப் பிரிந்த குழாய்களின் முடிவில் குட்டிக் குட்டியாக காற்றுப் பைகள் இருக்கின்றன... எத்தனை பைகள் இருக்கும் என்று எதிர்பார்க்கிறீர்கள்? சொன்னால் நம்ப மாட்டீர்கள்... கிட்டத்தட்ட முந்நூறு கோடி!



இந்தப் பைகள் எல்லாம் நுரை மாதிரி இருப்பதாலோ என்னவோ, பெயரும் மிகப் பொருத்தம் : நுரையீரல்!

'மூச்சுவிடுவதற்கு முக்கியமானது எது?' என்று கேட்டால், 'மூக்குதான் முக்கியம்' என்று தமாஷாகச்



சொல்லிவிடலாம். உண்மையில் மூச்சுவிட முக்கியமானது நுரையீரலின் கீழ்ப் பகுதியில் அமைந்துள்ள (Diaphragm) எனப்படும் அடிச்சவ்வு.

இது சுருங்கினால், நுரையீரல் கீழே இழுக்கப்பட்டு நுரையீரலுக்குள் வெற்றிடம் உருவாகும். இந்தக் காலி இடத்தை நிரப்ப, காற்று உள்ளே புகும். மீண்டும் நுரையீரல் அடிச்சவ்வு விரியும் போது, நுரையீரல் பழையபடி ஆகிவிடும்.

உள்ளே போன காற்றிலிருந்து இரத்தமானது, பிராண வாயுவை எடுத்துக் கொண்டு விடும். இதயத்திலிருந்து நுரையீரலுக்கு வந்து விட்ட கார்பன் டை ஆக்ஸைடு வெளியே போய் விடும். இத்தனை 'கிவ் அண்ட் டேக்

பாலிஸி'யும் மிக ஒழுங்காக நடைபெற வேண்டும். கொஞ்சம் எசகு பிசகு என்றாலும், பிராண அவஸ்தைதான்.

ஆஸ்துமா நோயாளிகள் விஷயத்தில், மூச்சுக் குழாயைச் சுற்றியிருக்கும் மென்தசை சுருங்கிப் போய்விடும். இதனால் உள்ளே வந்த காற்று வெளியேற முடிவதில்லை. மூச்சு வாங்குகிறது.

## ஏன் சுருங்க வேண்டும்?

நியாயமான கேள்விதான்! மூச்சுக் குழாய் மென்தசை ஏன் சுருங்க வேண்டும்? இதைத்தான் எல்லா ஆஸ்துமா நோயாளிகளும் டாக்டர்களிடம் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

வெயில் காலங்களில் குளம் குட்டைகளில் இருக்கும் நீர், ஆவியாகிறது. நாம் சுவாசிக்கும்போது, நம் மூக்குக்குள் அது நுழைகிறது. சுவாசிக்கும் ஆசாமி, வீக்கான உடல் வாகு கொண்டவராக இருந்தால், அந்த நீர்த்திவலைகள் ரத்தத்திலும் கலந்து விடுகின்றன. 'சோடியம் ஸல்ஃபேட்' என்ற திசு உப்பு, உடலில் போதுமான அளவு இல்லாத பட்சத்தில் இந்த துர்நீரானது இரத்தத்தில் தங்கி விடுகிறது.

'One molecule of Sodium Sulphate has the power to take up and carryout of the organism two molecules of water' என்று சொல்வதுண்டு. அதாவது சோடியம் சல்ஃபேட்டின் ஓர் அணுவானது, இரண்டு தண்ணீர் அணு மூலக்கூறுகளை வெளியேற்றும் சக்தி கொண்டுள்ளது.

ஒரு மனிதனுக்கு, உடலில் திசுக்களில் இருக்க வேண்டிய பன்னிரண்டு தாது உப்புகளில் ஒன்றான சோடியம் சல்ஃபேட் போதுமான அளவு இல்லாதபோது, உள்ளே போன நீரானது, ரத்தத்தில் கலந்து விடுகிறது. இதை வெளியேற்றும் முயற்சியில் சருமம் செயல்படும்போது, 'எக்ஸிமா' என்னும் சரும வியாதி வருகிறது.

உடல், தனக்குத் தேவையில்லாத துர்நீரை வெளியேற்றுவதைப் பார்த்து, உடனே அதி புத்திசாலிகளான நாம் என்ன செய்கிறோம்? சரும ஆயின்ட்மெண்ட்டை வாங்கி அதன் மேல் போடுகிறோம். துர்நீர் வெளியேற்றம் தடையாகி மீண்டும் ரத்தத்தில் கலந்து விடுகிறது.



# உடம்புக்கு ஒரே திகைப்பு!

'கண்ட கண்ட நீரெல்லாம் இவன் ரத்தத்துலே கலக்கு தேன்னு, சருமம் வழியா வெளியேத்தினா, ஆயிண்ட் மென்ட்டைப் போட்டுத் தூக்கறானே... இப்ப என்ன பண்ணலாம்'னு நடிகர் எம்.என். நம்பியார் மாதிரி கையைப் பிசைந்து யோசனை



செய்கிறது. அதிகப்படியான நீரை தும்மலாக வெளி யேற்றுகிறது.

ஹச்! தும்மலா? விட்டுவிடலாமா? நேராக மருந்துக் கடைக்குப் போய் தும்மலை நிறுத்த, இரண்டு ரூபாய்க்கு மாத்திரை வாங்கிப் போட்டுக் கொண்டு ''ஆஹா... போயே போச்சு'' என்று சந்தோஷப்படுகிறோம். ''எங்கே போச்சு? இதோ வருது பார்'' என்று நுரையீரல் நீரைப் பிரித்து, சளியாக வெளித் தள்ளுகிறது.

''சளி, இருமல்னு தொல்லையா இருக்கே... டாக்டரைப் பார்க்கலாம்''

ஓர் ஊசி, நாலு நாள் பன்னிரண்டு வேளை, கலர் கலரா மருந்து... முந்நூறு ரூபாய் காலி!

''நாம என்ன சிக்னல் கொடுத்தாலும், புரிஞ்சுக்காமல், எதிர்க்கட்சிக்காரன் மாதிரி ஸ்டே ஆர்டர் வாங்கித் தொலைக்கிறானே!'' என்று இன்னும் வெறுப்பாகிப் போகிறது உடம்பு. நம் உடலைப் பாதுகாக்கவும், மேலும் ஃபாரின் பாடிஸ் உடலில் சேராமல் தடுக்கவும் ஆயத்த வேலைகளில் இறங்குகிறது.

அந்த (அ) சுபவேளையில் ஆரம்பிப்பதுதான் ஆஸ்துமா!

லைப்ரரிக்குப் போய், ஒரு பழைய நாவலை வாங்கி வந்து பிரித்ததும், 'சுறு சுறு' என்று புத்தக தூசி மூக்குக்குள் நுழைகிறது. ''யாரோ வெளியாள் உள்ளே வரான். உடனே சுருங்கு'' என்று தகவலை, மூளை மூச்சுக் குழலுக்கு அனுப்புகிறது. ''அப்படியே சுவாமி'' என்று மூச்சுக் குழாயும் மென் தசையைச் சுருக்க, மூச்சுவிட சிரமமாகிறது.

''என்னது... மூச்சுத் திணறுகிறதே...'' என்று இரண்டு மூன்று முறை, சமாளித்து, கொஞ்சம் கடுமையானதும் டாக்டரைப் போய்ப் பார்த்தால்...

''திஸ் இஸ் பிராங்கைல் ஆஸ்துமா'' என்கிறார் டாக்டர்.

## ஆஸ்துமா ஏன்?

• பரம்பரை காரணமாக

• திசு உப்புக் குறைபாடுகளின் காரணமாக

• உடலில் எதிர்ப்புச் சக்தி குறைவதால்..

• சைனஸ், சளி, பிரச்னைகளால்

• நீரில் நனைந்துவிட்டு தலையைத் துவட்டாமல் விடுவது, நீர்ச்சத்துப் பொருள்களைச் சாப்பிடுவது, போன்றவை

• பூக்களின் மகரந்த ஒவ்வாமை




• வீட்டுத் தூசி, ஒட்டடை, போக்குவரத்துத் தூசி, மிளகாய் நெடி போன்றவற்றின் தாக்குதல்

• பூனை, நாய் போன்ற மிருகங்களின் முடி, வளர்ப்புப் பறவைகளின் சிறகுகள், எச்சங்களின் நாற்றம் போன்றவற்றாலும் வீஸிங் அதிகமாகும். எனவே, ஆஸ்துமா பிரச்னை உள்ளவர்கள், செல்லப் பிராணிகளை வளர்க்காமல் இருப்பது நல்லது.

# கடைப்பிடிக்க வேண்டிய முறைகள்



படுக்கை விரிப்பு மற்றும் தலையணை உறையை கண்டிப்பாக மூன்று நாட்களுக்கு ஒரு முறை மாற்ற வேண்டும்.

• இரவுச் சாப்பாட்டை சீக்கிரமாக முடித்துக் கொள்வது நல்லது.

• பனியில் சுற்றக் கூடாது.

• முகத்துக்குப் பவுடர் பூச வேண்டாம். பிறர் பவுடர் போடும்போது அருகில் நிற்க வேண்டாம்.

• பழைய புத்தகங்களைப் படிக்க வேண்டாம். படித்தே தீர வேண்டிய நிலையில் இருப்பவர்கள், பிறரை, தூசி தட்டித்தரச் சொல்லிவிட்டு, பிறகு படிக்கவும்.

• ரொம்ப நேரம் தலைக்குக் குளிக்க வேண்டாம்.

• எதற்கும் டென்ஷன் ஆகாதீர்கள். பதற்றப்பட்டால் வீஸிங் வர வாய்ப்புள்ளது.

• அதிக வாசனையுள்ள மலர்களைச் சூடினால் சில

பெண்களுக்கு வீஸிங் வரும்.

• சீயக்காய்த் தூள் பக்கமே போகாதீர்கள். மிதமான ஷாம்பு பயன்படுத்தலாம்.

• அதிக வாசனையுள்ள ஊதுபத்தி, சாம்பிராணி வேண்டாம்.

• வெளியூர் அல்லது விருந்தினர் வீட்டுக்குப் போனால், சுத்தமான துண்டும், போர்வையும் கொண்டு செல்லுங்கள். அவர்கள் தரும் தலையணையின் மேல் உங்கள் டவலை போர்த்தி விட்டுப் பயன்படுத்தவும்.

• சிகரெட்டை உடனே நிறுத்துங்கள்.

• மதுவகைகளுக்கு அனுமதி கிடையாது. மது அருந்தினால் வீஸிங் குறையும் என்று சிலர் தவறாக நினைக்கிறார்கள். மதுவில், வீஸிங்கைக் குறைக்கச் செய்யும் எந்த வஸ்துவும் இல்லை. கொஞ்சம் பிராந்தி, ரம் சாப்பிட்டால், நன்றாகத் தூக்கம் வரும். அவ்வளவுதான். பிறகு அது இருந்தால்தான் தூக்கம் வரும் என்று ஆகிவிடும்.



• பீர் சாப்பிடுபவர்களும், உடனே நிறுத்த வேண்டும். தொடர்ந்து பீர் அடிக்கின்றவர்களின் வயிறு, பானை போல இருக்கும். இரவில் படுத்த உடன், அது நுரையீரலின் கீழ் உள்ள அடிச்சவ்வை அழுத்துகிறது. அது நுரையீரலைத் தொந்தரவு செய்வதால், உடனே வீஸிங் ஆரம்பிக்கிறது.

• வீஸிங் இருக்கும் சமயத்தில் தாம்பத்ய உறவில் ஈடுபடக் கூடாது. புணர்ச்சியின் காரணமாக, வீஸிங் அதிகமாகி அவஸ்தை நேரும்!




## என்னென்ன சாப்பிடலாம்?

• வெதுவெதுப்பாக அல்லது சூடாகச் சாப்பிட வேண்டும்.





• பாலில் மஞ்சள் தூள், மிளகு உடைத்துப் போட்டு சாப்பிடலாம். வெறும் பால் கூடாது. சளி கட்டும்.

• எண்ணெய் அதிகம் சேர்க்கக் கூடாது.

• தணலில் சுட்ட சப்பாத்தி (புஸ்கா) ரொம்பவும் நல்லது. இது தேவையற்ற நீரை உடம்பிலிருந்து வெளியேற்றும்.

• பழங்களில் மலைவாழை மட்டுமே சாப்பிடலாம்.

மினி கல்கி





• பொன்னாங்கண்ணி, மணத்தக்காளி தவிர, மற்ற கீரைகளைச் சாப்பிடலாம்.

• மோர் நல்ல செரிமானத்தைக் கொடுக்கும். ஆனால் மோர் சாதத்தில் கொஞ்சம் வெந்நீர் சேர்த்துக் கொள்ளவும்.

• உலர் திராட்சை ஆஸ்துமாவுக்கு நல்லது. இது சளியை எடுக்கும்.

## என்னென்ன கூடாது?

• பழைய சாதம், தண்ணீர் கொட்டிய சாதம் பக்கமே போகாதீர்கள்.

• பால், சாக்லேட், டின் பானங்கள், மைதா, ரவை, முட்டை, கடல் உணவுகள், இனிப்பு அதிகம் உள்ள கேக், பிஸ்கெட், பிரட், பன், வெண்ணெய், நெய், ஜாம் போன்றவற்றைத் தவிர்க்கவும்.



• குளிர்பானம், ஐஸ்க்ரீம் கூடாது.

• சௌசௌ, பூசணி, புடலை, சுரை, வெள்ளரிக்காய், நூல்கோல், தக்காளி போன்றவை ஆஸ்துமாவை அதிகரிக்கும்.

• சாத்துக்குடி, ஆரஞ்சு, மாதுளை, பச்சை வாழை, திராட்சை, கொய்யா போன்ற

பழங்களில் நீர்ச் சத்து அதிகமுள்ளதால், இவையும் தவிர்க்கப்பட வேண்டியவையே!

## அவசர சிகிச்சை

ஆஸ்துமாவைப் பொறுத்தவரை, எந்த ஒரு சிகிச்சை முறையும் பூரணமானது கிடையாது. ஒவ்வொன்றிலும் ஒரு சில நிறைகளும், குறைகளும் கலந்துள்ளன. பொருத்தமான சிகிச்சையை எடுத்துக் கொள்வது புத்திசாலித்தனம்.

அவசரக் காலங்களில் அலோபதி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பிகூட உதவமாட்டார்கள். வீஸிங் ரெஸ்பிரேஷனோடு, நோயாளி ஒருவர் துவண்டு போய் மருத்துவமனைக்கு வரும்போது, தம்மாத்துண்டு சால்படோமால் மாத்திரை அல்லது ஸ்ப்ரே, வீஸிங்கை உடனே நிறுத்தி விடுகிறது.

ப்ரான்கோ டையலேட்டர்கள் கண்டு பிடிக்கப் படவில்லை என்றால், மிகவும் சிரமத்துக்கு உள்ளாகியிருப்போம். ஆஸ்துமாக்







காரர்களுக்கு இடுக்கண் களைவதே இன்ஹேலர்கள்தாம். இவை தற்போது நூறு ரூபாய் விலையில் கிடைக்கின்றன. ரொம்ப வசதியானது. சுலபமானது. ரத்தத்தில் கலக்காமல், நேரடியாக நுரையீரலை அடைவதால், உடனடி நிவாரணம் கிடைக்கிறது. மருந்துப் பொருள்கள் ரத்தத்துடன் கலப்பதால் ஏற்படும் பக்க விளைவுகளும் இதில் இல்லை.

## ஹோமியோபதி



ஹோமியோபதி சிகிச்சையில் நோய்களுக்காக மருந்துகள் கொடுப்பது இல்லை. நோய்க்கான காரணத்தை விரட்டத்தான் மருந்து தரப்படுகிறது. நோய் நாடி, நோய் முதல் நாடி... அது தணிக்கும் வாய் நாடுவதுதான் ஹோமியோபதியின் சிறப்பம்சம்.

'Who are you to worry about the organs? You have to worry about the patients' என்று ஹோமியோ மருத்துவ நூல்களில் சொல்வார்கள்.

வருத்தம், கோபம், மன அழுத்தம் போன்ற

வற்றைத்தான் முதலில் கணக்கில் எடுத்துக் கொள்வோம்.

தீர, துருவி, நோயாளியிடம் பேசி, அவர் நோயின் காரணத்தை ஆராய்வதுதான் ஹோமியோ டாக்டரின் முதல் வேலை. பிறகு அதற்கான மருந்தைத் தேர்வு செய்ய வேண்டும்.

ஹோமியோவில் நோயாளிக்கு என்ன வகை உணவு பிடிக்கும் என்று கேட்போம். சொன்னால் நம்ப மாட்டீர்கள். ஒரு ஆள் தனக்கு ஐஸ் க்ரீம் பிடிக்கும் என்று சொன்னால், ஆஹா என்று கேட்டுக் கொள்கிற ஆள் இல்லை நாங்கள். ஐஸ்க்ரீம் ஏன் பிடிக்கும்? என்று கேட்போம்.




சிலருக்கு ஐஸ்க்ரீமில் உள்ள இனிப்பு பிடிக்கும். அவர்களுக்கு அர்ஜென்ட்டம் நைட் மருந்தை தேர்வு செய்வோம். அதுவே ஜில்லிப்புக்காக என்றால் வேறு பல மருந்துகளைத் தேர்வு செய்வோம்.

அதே மாதிரி இன்னொரு அற்புத விஷயம் Time modality என்பது.

வீசிங் வருகிறது என்று சொன்னால், எப்போது வருகிறது என்று கேட்கும் ஒரே மருத்துவர் ஹோமியோ டாக்டராகத்தான் இருக்க முடியும்.

# நோயற்ற வாழ்வு



அமரர் கல்கி

நிழலின் அருமை வெயிலில் தெரியும் என்பார்கள். வயிற்று வலிக்காரனுக்குத் தெரியும் வயிற்று வலி இல்லாதிருப்பதன் ஆனந்தம்! உங்களுக்கும் எனக்கும் என்ன தெரியும்? இது மட்டுமல்ல. நோயும் சிகிச்சையும் கொஞ்சம் நாகரிகமானவைகளாயிருந்துவிட்டால், பின்னால் அவற்றைப் பற்றி விவரிப்பதில் உள்ள இன்பம் வேறெதிலும் கிடையாது என்று சொல்லலாம்.

உதாரணமாக, நான் ஜலதோஷத்துக்குச் சிகிச்சை செய்து கொண்ட கதையை எடுத்துக் கொள்ளுங்கள். இது வரையில் இருநூறு தடவை அதைச் சொல்லியிருக்கிறேன். ஒவ்வொரு தடவையும் அதைச் சொல்வதில் சந்தோஷம் அதிகரித்தே வருகிறது. ஏன்? இருநூற்றோராம் தடவையாக உங்களுக்குந்தான் சொல்லி விடுகிறேனே! (இக்கட்டுரை நான் எழுத ஆரம்பித்ததன் நோக்கம் என்னவென்று இப்போது உங்களுக்கு விளங்கியிருக்கலாம்).

மகாத்மா காந்திக்கும், வின்ஸ்டன் சர்ச்சிலுக்கும், பெர்னார்ட் ஷாவுக்கும், முஸோலினிக்கும், எனக்கும் பொதுவாயிருப்பது ஜலதோஷமாகும். வித்தியாசம் என்னவென்றால், அவர்களுக்கு ஜலதோஷம் வந்தால் உடனே அந்தச் செய்தியானது தரைத் தந்தி.

---

அதிகாலை ஐந்து மணிக்கு என்றால் நேட்ரம் ஸல்ப், நடு இரவில் வந்தால் லேக்கசிஸ், பாதி இரவில் என்றால் ஆர்ஸ் ஆல்ப் என்று நூற்றுக் கணக்கில் சரியான மருந்துகள் உள்ளன.

# ஆயுர்வேதம்

ஆஸ்த்மாவுக்கு 'தமகஸ்வாஸம்' என்று பெயர். ஆஸ்துமா எவ்வளவு நாளைக்கு ஒரு முறை வரும், எந்த வேகத்தில் வரும் என்பது ஆளுக்கு ஆள் வேறு படுகின்றது. சில நோயாளிகளுக்கு மைல்டு எபிசோடாக வரும். சிலருக்கு மூச்சு முட்டும் அளவுக்கு மட்டும் வரும். சிலருக்கு இருமலும், இழுப்பும் பயங்கரமாக இருக்கும். ஆஸ்துமா தீவிரமாக இருக்கும்போது, நோயாளியால் பேசக்கூட முடியாது.




கஸ்தூரி, துளசி, இஞ்சி, தூதுவளை போன்றவை கபத்தைத் தணிப்பதாகவும், உஷ்ண

கடல் தந்தி, ஆகாயத் தந்திகளின் மூலம் உலகமெங்கும் பறக்கின்றது. ஆனால், என்னுடைய ஜலதோஷத்தைப் பற்றி நானே இப்போது உலகத்துக்குத் தெரிவித்துக் கொள்ள வேண்டியதாயிருக்கிறது. பிறரை எதிர்பாராமல் அவர்களுடைய காரியங்களை அவரவர்களே பார்த்துக் கொள்ள வேண்டுமென்பதாக மகான் டால்ஸ்டாய், மகாத்மா காந்தி முதலியோர் சொல்லியிருப்பதால், என்னைப் பற்றிய செய்தியை நானே வெளிப்படுத்துவதில் தவறில்லை என்று கருதுகிறேன்.

(சட்டசபை அபேட்சகர்கள் சொல்லுவது போல்) நண்பர்கள், அபிமானிகள் பலருடைய வற்புறுத்தலுக்கிணங்கி, ஜலதோஷ சிகிச்சைக்காக நான் சென்னை நகருக்குப் புறப்பட்டுச் சென்றேன். கழுத்துக்கு மேற்பட்ட எல்லா வியாதிகளிலும் நிபுணர் என்று பெயர் பெற்ற டாக்டர் ரங்கராயணன் அவர்களிடம் முதலில் போனேன். அவர் மின்சார விளக்கு, பூதக்கண்ணாடி முதலியவைகளின் உதவி கொண்டு கழுத்துக்குமேல் உள்ள என்னுடைய எல்லா உறுப்புகளையும் நன்றாகப் பரிசோதனை செய்துவிட்டு, "காது, மூக்கு, தொண்டை மூன்றும் ஆபரேஷன் செய்தாக வேண்டும். ஒவ்வோர் ஆபரேஷனுக்கும் இருபது நாள் வீதம் மொத்தம் இரண்டு மாதம் சிகிச்சையில் இருக்க வேண்டும்" என்றார். நான் யோசித்தேன். ஆபரேஷன் என்றால் எனக்கு எவ்வளவோ பிரியம். அதைப் போல் நாகரிகமான சிகிச்சை வேறு எதுவும் கிடையாது. அதிலும் பெயர் பெற்ற டாக்டர்களிடம் ஆபரேஷன் செய்து கொண்டு விட்டால், அப்புறம் ஆயுள் பரியந்தம், "உங்களுக்குத் தெரியுமோல்லியோ, ஸார்! நான் டாக்டர்

வீரியம் உள்ளதாகவும் இருக்கின்றன. நல்ல கஸ்தூரி, 'கனகாசவம்' என்று சொல்லக் கூடிய ஊமத்தை மருந்து போன்றவை ஆஸ்துமாவுக்கு நல்ல நிவாரணம் தரக் கூடியன. கண்டங்கத்திரி, தூதுவளை, ஆடாதோடை, சிறுவழுதினை, கொள்ளு, சுக்கு, மிளகு, திப்பிலி, சித்தரத்தை, ஓமம் போன்றவற்றால் செய்யப்பட்ட கஷாயங்கள் மிகவும் பலனளிக்கின்றன.

கற்பூரத் தைலத்தைச் சூடாக்கி, மார்பில் புரட்டி, வெந்நீர் ஒத்தடம் தந்தால், ஆஸ்துமாக்காரர்களுக்கு 'அப்பாடா' என்றிருக்கும்.

## இதர சிகிச்சைகள்

அக்குபஞ்சர், காந்த சிகிச்சை, மலர் மருத்துவம் போன்றவை இணைந்த எலக்ட்ரோ டாய்கி தெரபியும் ஆஸ்துமாவை குணப்படுத்தும்.

ஆஸ்துமா என்பது 'ஏர்-வேஸ்' பிரச்னை என்பதால், தியானம், பிராணாயாமம் செய்வது நல்லது. பிராணன் •

மினி கல்கி



ரங்கநாராயணனிடம் 'நோஸ்' ஆபரேஷன் செய்து கொண்டபோது...'' என்று எவ்வளவோ பெருமையுடன் சொல்லிக் கொள்ளலாம். மேலும், இதைப் போல் தொண்டை, செவி, நாசி மூன்றுக்கும் ஒரே அடியில் ஆபரேஷன் என்றால் நினைக்க நினைக்க எனக்கே குதூகலம் தாங்கவில்லை. ஆனால், கொஞ்சம் பயமும் உண்டாயிற்று. ஒருவேளை தப்பித் தவறி ஆபரேஷன் சிறிது பிசகிவிட்டால், சூர்ப்பனகா பங்கமாகவல்லவா போய் விடும்?

இவ்வாறு யோசித்து, அங்கிருந்த உதவி டாக்டரிடம் ''மூன்று ஆபரேஷனுக்கும் எவ்வளவு பணம் டாக்டருக்குக் கொடுக்கும்படியிருக்கும்?'' என்று கேட்டேன். அவர் ''ஐந்நூறு ரூபாயாவது கொடுக்க வேண்டும்'' என்றார். உடனே அங்கவஸ்திரத்தை எடுத்து உதறிப் போட்டுக் கொண்டு அங்கிருந்து கிளம்பினேன். அப்புறம் அந்தப் பக்கமே திரும்பிப் பார்க்கவில்லையென்றால், நீங்கள் நிச்சயம் ஆச்சரியப் படமாட்டீர்களென்று நம்புகிறேன்.

**இக்கட்டுரையை விரிவாகப் படிக்க www.kalkionline.com பார்க்கவும்.**

இயமம் = பிராணாயாமம். பிராணனை முறைப்படுத்தும்போது நல்ல பலனளிக்கிறது.

ஆனால் இவற்றை யோகா நிபுணரிடம் முறையாகக் கற்று பயிற்சி பெற வேண்டும்.

ஆஸ்துமா என்பது ஒரு நோயே அல்ல. அது ஒவ்வாமை எனப்படும் அலர்ஜிதான். அலோபதி, ஹோமியோபதி, சித்தா, ஆயுர்வேதம் மற்றும் பல அரிய மருத்துவமுறைகள் ஒருங்கிணையும்போது பல முனைத்தாக்குதலால், ஆஸ்துமா துவண்டு போய் அழியும். அந்த நாள் வெகு தூரமில்லை. அந்தப் பொன்னாளில், எல்லோரும் மூச்சு விடுவோம். திணறலான இழுப்பு மூச்சு இல்லீங்க. ஆனந்தப் பெருமூச்சு!



தொகுப்பு : **அனுராதா சேகர்**
அட்டைப்படங்கள் : **ஸ்ரீஹரி**
படங்கள் : **இரா. சண்முகசுந்தரம்**
கார்டூன்ஸ் : **ஃபைவ் ஸ்டார் கிருஷ்ணா**
மாடல் : **அஞ்சலி அமித்**

# இத்தனை நாளா

# இது தெரியாமல் போயிடுச்சே!..

பணம் எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை, குழந்தைகளை நன்கு படிக்க வைக்க வேண்டும் எனத் தீர்மானித்து, பிள்ளைகளைக் கான்வென்டில் சேர்த்தோம்.

ஆபீஸ் விஷயமாக என் கணவர் அடிக்கடி 'டூர்' போய்விடுவதால், குழந்தைகளது படிப்பு விஷயத்தில் நான்தான் கவனம் செலுத்த வேண்டியிருந்தது.



ஆனால், எனக்கு இங்கிலீஷ் அவ்வளவாகத் தெரியாத காரணத்தினால், டீச்சர்களிடம் குழந்தைகளது படிப்பு பற்றி விசாரிக்க முடியாமலும், பாட சம்பந்தமாகக் குழந்தைகள் கேட்கும் சந்தேகங்களுக்கு பதில் சொல்ல முடியாமலும் நான் பட்ட அவஸ்தை சொல்லி மாளாது.

மும்பையிலிருந்து வந்திருந்த என் அத்தை பெண்ணிடம் இதுபற்றி பேசிக்கொண்டிருந்த போது, "கல்யாணமாகி மும்பை போன புதிதில் நானும் உன்னைப் போல இங்கிலீஷ் பேச முடியாமல் திண்டாடினேன்.

"**விவேகானந்தா இன்ஸ்டிட்யூட்** பற்றி கேள்விப்பட்டு, அவர்கள் நடத்தும் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து இங்கிலீஷ் கற்றுக்கொண்டேன். தமிழ்நாட்டில் வசிக்கும் உனக்கு இந்த 'கோர்ஸ்' பற்றி தெரியாமல் போய்விட்டதே" என்று கோபித்துக் கொண்டாள்.

உடனே, நான் **விவேகானந்தா இன்ஸ்டிட்யூட்டிற்கு** ஒரு போஸ்ட் கார்டு எழுதிப் போட்டேன்.

கோர்ஸ் பாடங்கள் V.P.P. மூலம் வீட்டிற்கு வந்தன.

பாடங்கள் எல்லாம் ஈஸியா புரியற மாதிரி, ரொம்ப சிம்பிளா இருந்ததால், நேரம் கிடைக்கும் போதெல்லாம் பாடங்களைப் படிச்சு பிராக்டிஸ் செய்தேன்.

இப்போ என்னால, பயமில்லாம சகஜமா இங்கிலீஷில் பேச முடியுது. குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க இந்த கோர்ஸ் எனக்கு ரொம்ப 'யூஸ்ஃபுல்லா' இருக்கு.

இத்தனைநாளா இந்த கோர்ஸ் பத்தி தெரியாம போயிடுச்சேன்னு வருத்தமா இருந்தாலும், இப்போவாவது இந்த கோர்ஸ்ல சேர்ந்து இங்கிலீஷ் பேசக் கத்துக் கிட்டோமேன்னு ரொம்ப சந்தோஷமா இருக்கு.

– Mrs. **துர்கா பிரசாத்**

நீங்களும் வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் சுலபமாக இங்கிலீஷ் பேசக் கற்றுக் கொள்ளலாம்.

ஒரு போஸ்ட் கார்டில் "நான் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர விரும்புகிறேன்" என்று எழுதி, உங்களது விலாசத்தை தெளிவாகக் குறிப்பிட்டு, **விவேகானந்தா இன்ஸ்டிட்யூட்**, P.B.No. K 4986, **9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை - 600 017** என்ற முகவரிக்கு இன்றே அனுப்புங்கள். பாடங்கள் V.P.P. மூலம் உங்களது வீடு தேடி வந்துவிடும். தபால்காரரிடம் **ரூ. 395/-** செலுத்திப் பெற்றுக் கொள்ளுங்கள்.

ஓய்வு நேரத்தில் பாடங்களைப் படித்து, பிராக்டிஸ் செய்து மடமடவென இங்கிலீஷில் பேச ஆரம்பியுங்கள்.

ADVT

வளாகத்தை நெருங்கும் முன்பே காற்றில் மிதந்து வருகிறது மருந்துகளின் மணம். அரவைக் கூடத்துக்குள் நுழைந்தால் பிரமிப்பு. பஸ்பம், செந்தூர மருந்துகள் அரைக்கப்படும் ஐம்பதுக்கும் அதிகமான கலுவங்கள் அத்தனையும் கருங்கல்லால் ஆனவை. சித்தவைத்திய பாரம்பரியத்துக்கு பங்கம் வந்துவிடாதபடி, கருங்கல் குழவிகளை மின்சாரக் கைகள் கொண்டு, ஆட்டி ஆட்டி அரைக்கும் காட்சி, மருந்து தயாரிப்பில் புரட்சி!



• டி.எஸ். சௌந்தரம்

அடுத்த கூடத்தில் விறகுத் தீயில் லேகியம் தயாராக, மற்றொரு கூடத்தில் சுடுமண்பானைகளைக் கொண்டு, இயற்கை முறையில் தைலங்களை வடித்து எடுக்கிறார் ஒரு பெண்மணி. இங்கே மருந்துகள் தயாரிப்புப் பணியில் ஈடுபட்டிருக்கும் அத்தனை பேருமே மகளிர்தான். ஆதரவற்ற மகளிர். இவர்கள் தயாரிக்கும் மருந்துகளுக்கு இந்தியா முழுக்க அமோக ஆதரவு!

கிராமப் பொருளாதாரமே நாட்டின் பொருளாதாரத்திற்கு அடிப்படை, என்ற தேசத் தந்தையின் கொள்கைகளுக்கு செயல்வடிவம் தரும் விதமாக, டாக்டர் டி.எஸ். சௌந்தரம் அம்மையார் தொடங்கிய திண்டுக்கல் காந்தி கிராமியப் பல்கலைக் கழகத்தின் ஒரு அங்கமாக இருக்கிறது 'லட்சுமி சேவா சங்கம்'. ஆதரவற்ற பெண்களுக்கு வேலை வாய்ப்பை ஏற்படுத்தித் தருவதற்காக 1977-ல் தொடங்கப்பட்ட லட்சுமி சேவா சங்கம் இன்று, சித்த ஆயுர்வேத மருந்துகள் தயாரிப்பில் வியத்தகு சாதனைகளைப் புரிந்து வருகிறது. மொத்தம் இருநூற்று முப்பது வகையான மருந்துகள்! சர்க்கரை நோய்க்கு இவர்கள் தயாரித்து அளிக்கும் நிசா ஆம்லகி மாத்திரையும், அஸ்வகந்தாதி சூரணமும், காஷ்மீர் வரை வரவேற்புப் பெற்றவை. இவர்களது செய்முறை நேர்த்தி, தரம் ஆகியவற்றைப் பார்த்த அரசாங்கம், மொத்தம் நாநூற்று ஐம்பது வகையான சித்தா மற்றும் ஆயுர்வேத மருந்துகளைத் தயாரிக்க அனுமதி அளித்திருக்கிறது.

எங்கெங்கு காணினும் சர்க்கரை நோயைப் போல, மெத்தனமாக விட்டுவிட்டால், மொத்தமாகத் துன்புறுத்தும் இரத்த அழுத்தத்துக்கு, இவர்கள் அளிக்கும் சர்ப்பகந்தா மாத்திரை வெற்றிகரமான தீர்வாக சித்த மருத்துவர்களால் பரிந்துரை செய்யப்படுகிறது. இவை தவிர, நோய் எதிர்ப்புச் சக்திக்கு ச்யவனபிராசலேகியம், பசியை ஊக்குவிக்க பில்வாதி லேகியம், ஞாபக சக்திக்கு வல்லாரை மாத்திரை மற்றும் லேகியம், ஆஸ்துமா, இளைப்பிற்கு வாஸகண்டகாரி லேகியம் போன்றவையும், மூட்டு வலிக்கு பிண்டத் தைலமும் இவர்களது தயாரிப்புகளில் மிகப் பிரபலமாக இருக்கின்றன.




தொடக்கத்தில் வெறும்

ஏழாயிரம் ரூபாய்க்கு மருந்துகளை விற்று வந்த லட்சுமி சேவா சங்கம், இன்று ஆண்டு விற்பனை வருமானமாக ஒரு கோடியே ஐம்பது லட்சம் ரூபாய் ஈட்டும் அளவுக்கு உயர்ந்திருக்கிறது. இந்த அற்புதம் எப்படி நிகழ்ந்தது?

"மூலிகைகள், அடிப்படை மருந்துகள், அரைக்கும் கால அளவு, மருந்துகளை நவீன முறையில் பேக் செய்தல் போன்ற எதிலும் சமரசம் செய்து கொள்வதில்லை" என்கிறார் சங்கத்தின் மேலாளர். இங்கு செய்யப்படும் மருந்துகளுக்கான மூலிகைச் செடிகள் மற்றும் வேர்களை, திண்டுக்கல்லை ஒட்டியுள்ள சிறுமலை, பழனி மலைப்பகுதி, மற்றும் கொல்லி மலைப் பகுதிகளில் வசிக்கும் பழங்குடியினர், ஆதிவாசிகள் மூலம் பெறுகிறார்களாம். இது தவிர, ஆதிலட்சுமிபுரத்தில் ஒன்பது ஏக்கர் பரப்பளவில் மூலிகைத் தோட்டம் அமைத்து, இயற்கை வேளாண்மை மூலம் அரிய மூலிகைகளைப் பயிர் செய்து கொள்கிறார்கள்.

இங்கே தயாரிக்கப்படும் மருந்துகள் அனைத்துக்கும் சந்தையில் அதிகத் தேவை இருந்த போதிலும், சில மூலிகைகளும் மூலப் பொருட்களும் குறிப்பிட்ட மாதங்களில் மட்டும் கிடைப்பதால், உற்பத்தியை ஒரே சீராக உயர்த்தி வருகிறது லட்சுமி சேவா சங்கம். பதினான்கு மாவட்டங்களில் உள்ள அரசு சித்த மருத்துவமனைகள், ஐம்பத்தி இரண்டு சர்வோதய சங்கங்கள் தவிர, காந்தி கிராம ஷோரும்களிலும் விற்பனைக்குக் கிடைக்கிறது இவர்களின் மருந்துகள்.

# மருந்துகள் செய்யும் மகளிர் கரங்கள்!





தமிழகத்துக்கு வெளியே கேரளம், கர்நாடகம், மகாராஷ்டிரம், டெல்லியிலும் விற்பனைக்குக் கிடைக்கின்றன.

**கா**ந்தி கிராம அறக்கட்டளையின் சார்பில், சேவை மனப்பான்மையுடன் நடத்தப்படும் லட்சுமி சேவா சங்கத்துக்கு இப்போது வெள்ளி விழா ஆண்டு. மருந்துகள் விற்பனை மூலம் கிடைக்கும் வருவாய் முழுவதும், ஆதரவற்றோர் இல்லத்திற்காகச் செலவழிக்கப்படுவது கூடுதல் சிறப்பு.

- ஸ்ரீ

படங்கள் : ஜெய்

# ராஜா வீட்டுக் கன்னுக்குட்டி

'நடேசா, சௌக்கியமா இருக்கியா? இங்க நானும், உங்கம்மா, தங்கைகளும் சௌக்கியம். நம்ம பட்டுக்கோட்டை பெரியப்பா ஒரு வாரமா இங்கே வந்து தங்கியிருந்துட்டு, போன புதனுக்குதான் கிளம்பினாங்க. அவங்களும் உன்னை ரொம்ப விசாரிச்சதா சொல்லச் சொன்னாங்க. உன் சிநேகிதப்பய பரமசிவனுக்கு அடுத்த வாரம் கல்யாணம். அவங்க அப்பாவும், அம்மாவும் வந்து பத்திரிகை கொடுத்துட்டுப் போயிருக்காங்க. அவனும் நேத்தி சாயங்காலம் நேர்லவந்து, உன்னை அவசியம் வரச் சொல்லி கடுதாசி எழுதணும்னு என்னைக் கேட்டுகிட்டுப் போனான். அதனால, நீ எவ்ளோ சீக்கிரம் முடியுமோ, அவ்ளோ சீக்கிரம் கிளம்பி ஊருக்கு வந்து சேர வேண்டியது. அப்படியே நம்ம ராவுத்தர் பாய் கடையில உனக்கு ஒரு நல்ல வேலைக்கும் சொல்லியிருக்கேன். முன்போல இல்லை; இந்தத் தடவை கட்டாயம் அமைஞ்சிரும் போலிருக்கு. புறப்பட்டு வா, நேர்ல பேசிக்கிடுவோம்.

பரமசிவனுக்குக் கல்யாணம் என்பது சந்தோஷமான விஷயம்தான், ஆனால் அதற்காக ஊருக்குப் போக வேண்டுமா என்றிருந்தது. ஒரு நல்ல வேலை இல்லாமல் அந்த ஊர் மண்ணை மிதிக்கிறதில்லை, என்று மானசீகமாய்ச் செய்த சபதம் உடைந்து போகுமோ என்று பயந்தான் அவன். ராவுத்தர் பாய் கடையில் அவனுக்கு வேலை பார்த்திருக்கிறதாய் அப்பா சொல்வதையும், அத்தனை உறுதியாய் நம்புவதற்கில்லை, மிகை நம்பிக்கைகள் தருவதற்கும், அவை அவன் கண்முன்னே தூள்தூளாய் உடைந்து சிதறும்போது அலட்டிக் கொள்ளாமல், "அடுத்தவாட்டி ஷ்யூரிட்டியா கெடச்சிடும்யா, ஏன் கவலைப்படறே?" என்று வருத்தமில்லாமல் ஒரே மாதிரி பேசுவதற்கும், அப்பாவைப் போல் வராது.

அப்பாவையும் குற்றம் சொல்வதற்கில்லைதான். வாழ் நாள் முழுக்க அவர் வேலை என்று யாரிடமும் நின்றதில்லை, கேட்டதில்லை. ஒரு துரும்பை நகர்த்திப் போடுகிற வேலை கூட அவராகச் செய்ததில்லை, பரம்பரைச் சொத்து. வசதியான அம்மாவை மணந்து கொண்ட பரம்பரைச் சொத்து. ஆகியவற்றைக் கட்டி மேய்க்கிற வலுவான பணக்காரராகவே அவர் பெரும்பாலான பால்யத்தைக் கழித்திருந்தார்.

பதினேழிலும், பதினெட்டிலுமாக ஒவ்வொரு பெண்ணுக்கும் திருமணம் செய்விக்க ஆரம்பித்த அப்பா, மிக விரைவில் தமது நீண்ட நாள் சொத்துக்கள் யாவும், ஒவ்வொன்றாய் கையை விட்டுப் போகக் கண்டார். ஒரு கட்டத்தில் மீதமிருப்பது பூர்வீக வீடு ஒன்றுதான் என்கிற நிலைமை. சுமாரான டிகிரி காகிதத்தோடு அவனது வேலைக்காக அவர் தீவிரமாய் முயல ஆரம்பித்தது அப்போதுதான்.

வேலை என்பது குதிரைக் கொம்பாகிப் போக, அவன் பிச்சைக்காரன் போல உணர்ந்தான்.

அப்பா எப்போதும் பிறர்மேல் காட்டி வந்த ஆதிக்கத்தையெல்லாம் மொத்தமாய் அவன் பக்கம் திருப்ப ஆரம்பித்தார். காலையில் துவங்குகிற அர்ச்சனை, நாள் முழுக்கத் தொடரும். "முட்டாப்பய மவனே, சீக்கிரமே எழுந்திரிச்சு, நாலு எடத்துக்குப் போய் நல்ல வேலையா தேடிக்கிற வழியைப் பாருடா" என்றோ, "இன்னும் எத்தனை நாளைக்கு உனக்கு நான் தண்டச்சோறு போட முடியும்?" என்றோ, விஷம் நிரம்பிய வார்த்தைகளை அவர் அன்றாடம் கொட்ட ஆரம்பித்ததில், நடேசனின் தூக்கம் கெட்டதோடு, நிம்மதியும் கெட்டது.

இந்தப் பிரச்னைகளெல்லாம் சின்னஞ்சிறியவை. அவன் வேலை தேடிப்போன பகுதிகளில் அவனுக்கு நேர்ந்த அனுபவங்களையும், அவமானங்களையும் பட்டியலிட்டால், இந்தக் கதையை அச்சிடுகிற காகிதம்

**என்.சொக்கன்**



தொப்பலாய் நனைந்து போகும்.

இந்த ஏமாற்றங்களின் தொடர்ச்சியாய், ஒவ்வொரு தினமும் அவன் அப்பாவின் வசவுகளோடு நரகமாய்க் கழிந்தது.

இத்தனை பேசுகிறாரே, அவரே அவனுக்கு ஒரு வேலையைப் பார்த்துத்தர முடியாதா, என்று நடேசனுக்குத் தோன்றும், ஆனாலும் அப்பா ஊரில் தனக்கிருக்கிற மரியாதையை, யாரிடமோ சிபாரிசுக்குச் சென்று கெடுத்துக் கொள்ள விரும்பவில்லை என்பதும் அவனுக்குப் புலனாகியிருந்தது. அதுமட்டுமில்லை, அப்பா உள்ளூர நினைத்துப் பெருமை கொண்டி

ருக்கும் ஊர் மரியாதையும், கம்பீரமும் இன்னபிறவும், எந்த அளவு காசுக்காகும் என்று அவனுக்கும் புரியவில்லை, அப்பாவுக்கும் தெரியவில்லை. கடைவீதிப் பக்கம் போகும் போதெல்லாம் அப்பாவை மரியாதையோடு கை கூப்புகிற அரிசி மண்டிக் காரரிடம், "என் மகனுக்கு ஒரு வேலை போட்டுக் கொடு" என்று இரந்து கேட்டால், அவரது எதிர்வினை எப்படியிருக்கும்? அதை சோதித்துப்பார்க்க அப்பா தயாரில்லை, ஆகாயக் கோட்டைகளாகவே இருப்பினும், அவற்றை கடப்பாரையால் குத்தி வலுப்பார்க்க யாருக்கும் துணிச்சலிருப்பதில்லைதான்.

நீண்ட யோசனைக்குப்பின் நடேசன் ஒரு முடிவுக்கு வந்தான். ஒரு நல்ல வேலையை சம்பாதித்துக் கொள்ளாமல், இந்த ஊருக்குத் திரும்பி வருவதில்லை, அது மூட்டை தூக்குகிற உத்யோகமாய் இருந்தாலும் பரவாயில்லை. வீட்டுச் செலவுகளுக்கும், தங்கைகளின் திருமண நிதிக்கான சேமிப்புக்கும், போதுமான அளவு சம்பளம் வருகிற வேலையாய் வேண்டும். அது கிடைக்கிறவரை, அப்பாவின் முகத்தில் விழிக்கிறதில்லை என்று உள்ளுக்குள் உறுதி பண்ணிக் கொண்டான். அவனுடைய யோசனைக்கு அப்பாவும் அதிசயமாய் சம்மதித்துவிட, திருப்பூரிலிருந்த சிநேகிதன் சரவணனுக்கு ஒரு கடிதம் போட்டுவிட்டு, அதற்கான பதிலுக்குக் கூடக் காத்திராமல் அவன் ரயிலேறிவிட்டான்.

சின்னக் கிணற்றிலிருந்து பரந்த உலகத்துக்குள் எகிறிக் குதித்துவிட்ட தவளையைப் போல, அந்தப் பெரிய ஊர் தந்த பிரமிப்பிலிருந்து மீண்டு வருவதற்கே நடேசனுக்குப் பல நாட்களாயின. தெருவுக்குத் தெரு பனியன் கம்பெனிகளாய் நிறைந்துகிடந்த திருப்பூரிலும், அவனுக்கான வேலை கிடைப்பதில் ஏகப்பட்ட சிரமங்கள்தான். சரவணனும், அவன் நண்பர்களும் இருந்த சின்னஞ்சிறு அறையில் ஓர் ஓரமாய்த் தங்கிக் கொண்டு, சான்றிதழ்களோடு உள்ளாடை ஏற்றுமதி நிறுவனங்களை ஒவ்வொன்றாய் உலா வர ஆரம்பித்தான் நடேசன். வாடிக்கையான ஏமாற்றங்களும், நிராகரிப்புகளும் அங்கேயும் தொடர்ந்தன.

அவன் கடிதம் எழுதவில்லை என்றாலும், அப்பா அவ்வப்போது எழுதிக் கொண்டிருந்தார். அவற்றிலும் ஒரு அன்பான, பாசமான வார்த்தை கிடையாது. இந்த முறைதான் அப்பாவிடமிருந்து திட்டலில்லாத கடிதம் ஒன்று வந்திருக்கிறது. பரமசிவன் கல்யாணத்தை அவசியம் பார்த்தாகவேண்டும் என்கிற ஆசை இருந்தது. அவன் கட்டிக் கொள்ளப் போகிற தேவியும், அவர்களோடு ஓடியாடிய சிநேகிதிதான். பசுமை நிறைந்த நினைவுகளுக்காகவாவது திருமணத்துக்குப் போய்வரலாம்.

அதிகாலையில் நடேசன் வீட்டுக்கு வந்தபோது, அப்பா எப்போதும் போல் திண்ணையில் கால்மேல் கால்போட்டு உட்கார்ந்து 'தினத்தந்தி' பார்த்துக் கொண்டிருந்தார், அவனை நிமிர்ந்து கவனித்து எதற்காகவோ மீசையை ஒருமுறை முறுக்கியபடி, 'வாடா மஹாராஜா' என்ற போதுகூட, அவரிடத்தில் கள்ளமில்லாத சிரிப்புதான். ஏதும் பேசாமல் உள்ளே போனான். அம்மாவின் உச்சி முகரல், விசாரிப்புகளை ஏற்றுக் கொண்டு, குளித்துவிட்டு உள்ளே வந்தபோது, கூடத்தில் இலை போட்டு இட்லிகளோடு உட்கார்ந்திருந்தார் அப்பா. "உட்காருடா சாப்பிடலாம்" என்றார்.

இரண்டாவது இட்லித் துணுக்கை வாயில் இடுவதற்குள் அப்பா ஏதாவது கேட்பார் என்று எதிர்பார்த்தான், அதே போல் அவரும், "என்னப்பா, திருப்பூர்ல ஏதுனா நல்ல சேதி உண்டா?" என்று

## அன்புள்ள 212!

சிங்கப்பூரில் வக்கீலாக இருக்கிறார் மைக்கேல். மூப்பத்தொன்பது வயசு. இவருடைய பெயர் கின்னஸ் புத்தகத்தில்! ஏன்? 'ஒரு வருஷத்தில் பத்திரிகைகளில் மிக அதிகமான கடிதங்கள் எழுதியவர்' என்ற காரணத்துக்காக! 2002 ஆகஸ்டு முதல் 2003 ஜூலை வரை, அவர் பத்திரிகைகளில் 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' பகுதியில் மொத்தம் 212 கடிதங்கள் எழுதியிருக்கிறார்! இவருடைய கடிதங்களைப் பற்றி தினமும் இவருக்கு சராசரி இரண்டு கடிதங்கள் வருகின்றன! 'இன்ன விஷயம் குறித்து என் சார்பில் எழுதுங்கள்' என்று



கேட்டு ஃபோன் செய்பவர்கள் ஏராளம்!

• அனிதா ராமச்சந்திரன்

ஆரம்பித்தார். அவன் வாயிலிட்டதை நிதானமாய் விழுங்கி முடித்துவிட்டு, "பார்த்துட்டிருக்கேன்பா" என்றான்.

அப்பாவின் ஆர்ப்பாட்டமான சிரிப்பு இப்போதும் எழுந்தது. "நான்தான் சொன்னேனேடி. நானாப் பார்த்து எதுனா செஞ்சாத்தான் உண்டு இவனுக்கு, சொந்தக் கால்ல நின்னு தேடிக்கிறேன்னு, சும்மா சவால் விட்டா ஆச்சா?" என்றார் அம்மாவைத் திரும்பிப்பார்த்து.

அதுவரை சாப்பிட்ட எல்லாம் சட்டென்று அவன் தொண்டையில் சிக்கி நின்றுவிட்டது போலிருந்தது நடேசனுக்கு. இதயம் தேம்பிக் கதறியது.

"சரி சரி, சாப்டுட்டுக் கிளம்பு, ராவுத்தர் பாயைப் பார்த்துட்டு வந்துடுவோம்" என்று ஏதும் நடக்காததுபோல் அப்பா சொன்னபோது, அவன் மெல்லமாய்த் தலையசைத்தான். எத்தனை முயன்றும் கண்ணோரத்தில் சூடான நீர்த்துளியைத் தவிர்க்க முடியவில்லை.

அவர்கள் ராவுத்தர் பாயின் முன்னே அமர்ந்திருந்தார்கள். அவர் அவனது காகிதங்களை ஆர்வமில்லாமல் புரட்டிக் கொண்டிருக்க, முள்ளின்மேல் அமர்ந்திருப்பதை போலத் தவித்தான். உள்ளூரில் பட்ட அவமானம் போதும் என்றுதானே, கண் காணாத திருப்பூருக்கு ஓடியது? பரமசிவனின் கல்யாணத்துக்கு ஆசைப்படப் போய், மீண்டும் இப்படியொரு வலையில் சிக்கிக் கொள்ள நேர்ந்ததே என்று அவனுக்குப் பெரும் ஆதங்கமாய் இருந்தது.

உணர்ச்சிகளற்ற வெண் தாடி ராவுத்தரின் முகத்தைத் தீவிரமாய் வெறித்துப் பார்த்தான். 'வெற்று நாடகமெல்லாம் போதும் கிழவா, ஏன் தயங்குகிறாய்? இந்தப் பையன் எனக்குத் திருப்தியில்லை என்று வெளிப்படையாய்ச் சொல்லிவிடு. சீக்கிரமாய்ச் சொல்லிவிடு. முகத்தில் கதவைச் சாத்தி என்னை வெளியே துரத்திவிடு. நான் ஒரு சிகரெட் குடித்துவிட்டு என் சிநேகிதன் கல்யாணத்துக்குப் போய்ச் சேருகிறேன்.'

"முதல்ல நம்ம கம்பெனியில எதும் வேலை காலியிருக்கான்னு கேட்கணும்" என்றார். அதற்குமேல் பேசத் தயங்கியவர் போல், மேஜை மேலிருந்த உலக வடிவ பேப்பர் வெயிட்டைக் கையிலெடுத்துச் சுழற்றினார்.

சில நிமிடங்கள் பொறுத்து அப்பாவின் செருமலோடு அவ்வறையின் நிசப்தம் கலைந்தது. "ராவுத்தர் பாய்" என்று ஒரு முறை சம்பிரதாயமாய் அழைத்த அப்பாவுக்கு, அதற்குமேல் சொல்ல நினைத்தவை யாவும் மறந்தது போலிருந்தது. சற்றே தலையைக் குனிந்தவர், இன்னும் சில நிமிடங்கள் எடுத்துக் கொண்டபின் மறுபடி பேசினார். அவரது வழக்கமான வேகமும், தெம்புமற்ற சவலைக் குரல். இக்கித் திணறி வெளி வருகிற வார்த்தைகள். "நீங்கதான் கொஞ்சம் பார்த்து உதவணும் பாய். என் பயலும் என்னை மாதிரி பொறுப்பில்லாம ஊரைச் சுத்திகிட்டுத் திரிவானோன்னு பயப்படாதீங்க, அவன் அவங்க அம்மா வளர்ப்பு. எந்த வேலை கொடுத்தாலும் கச்சிதமாச் செய்வான்." அந்த இடத்தில் அடைத்துக் கொண்டது போல் அப்பாவின் குரல் நின்று போனது.

நடேசன் நம்பமுடியாத ஆச்சரியத்தோடு அப்பாவைத் திரும்பிப் பார்த்தான். தரை நோக்கிக் கவிழ்ந்த நிலையில், அவரது தலை பெரியதொரு வட்டம் போல் தென்பட்டது. அப்பாவின் கம்பீரமெல்லாம் சுருங்கிப் போய், அந்த பூஜ்ஜியத்துக்குள் ஒளிந்திருக்க, வாழ்க்கையிடம் பெரிதும் தோல்வியுற்ற மனிதர்போல் தலைகுனிந்திருந்த அப்பாவைப் பார்க்க, அவனுக்கு ரொம்பவே பாவமாயிருந்தது. ◯

## மார்க் போடு தலைவா!



# புரட்சித் தலைவிக்கே சவாலா?

அடுத்தபடியா, நீங்க மார்க் போடப் போறது தமிழக முதல்வர் ஜெயலலிதாவுக்குன்னு தெரிஞ்சுருக்குமே!

'பனைமரத்துலே வெளவாலா? புரட்சித் தலைவிக்கே சவாலா?'னு கோஷம் போட்டது போதும். கச்சிதமா கணிச்சு, அனுப்பி வையுங்க. முழு முகவரி முக்கியம். சிறந்த முறையில் மதிப்பெண் போட்டவங்களுக்கு டிக்கெட் தரப்படும். தேர்தல் டிக்கெட்னு நினைச்சுக்கப் போறீங்க. நான்கு பேர் அடங்கிய குடும்பத்துக்கு சினிமா டிக்கெட். உறையின்மீது 'மாண்புமிகு டாப்டென் - 4' என்று குறிப்பிடவும்.

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**கடைசித் தேதி : 1.3.2004**

| | தகுதி | முழு மதிப்பெண் | ஜெயலலிதா பெற்றது |
|---|---|---|---|
| 1. | தலைமைப் பண்பு (லீடர்ஷிப் குவாலிடி, வசீகரம்) | 10 | |
| 2. | முடிவெடுக்கும் திறன் | 10 | |
| 3. | கறைபடாத கரங்கள் | 10 | |
| 4. | அரசியல் சாணக்கியம் | 10 | |
| 5. | மனித நேயம் | 10 | |
| 6. | தொண்டர்களோடு தோழமை | 10 | |
| 7. | மேடைப் பேச்சு | 10 | |
| 8. | மாற்றுக் கட்சியினரை மதிக்கும் போக்கு | 10 | |
| 9. | தனிமனித ஒழுக்கம் | 10 | |
| 10. | நிர்வாகத் திறமை | 10 | |
| | மொத்தம் | 100 | |

மாண்புமிகு டாப் டென் - 4

பெயர் ..............................

முகவரி ..............................

..............................

..............................

# 'கே' சென்டிமெண்ட்!



கட்டவிழ்த்து விடப்பட்ட கன்றுக்குட்டி போல எப்போதும் துறுதுறுவென்று இருக்கும் குஷ்பூ, அன்று சால்வையைப் போர்த்திக் கொண்டு, முனகிக் கொண்டிருந்தார். நல்ல, ஸாரி... கெட்ட ஜுரம்!

வெடவெடப்பும், சோர்வும் சில நிமிஷங்களுக்குதான். 'கல்கி' என்று ஆரம்பித்ததுமே, "எஸ்... 'கல்கி'! இது நான் ஜெயா டி.வி.க்காகத் தயாரிக்கிற டெலி சீரியல். முதன்முதலா நானே கதை எழுதியிருக்கேன். 'கலங்காமல் கலக்குவாள் கல்கி' இதுதான் டைட்டிலோட டை லைன். நல்லாயிருக்கா?" என்று உற்சாகம் நுரைக்கப் பேசினார்.

"கிளிசரின் பாட்டில் எல்லாம் வாங்கியாச்சா?"

"நோ... நோ! நிச்சயமா பொங்கப் பொங்க அழ வைக்கமாட்டோம். இது சம்திங் டிஃபரண்ட்! எப்பவும் நடுத்தரக் குடும்பத்து கஷ்ட நஷ்டங்களையே தான் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். 'கல்கி'யில் ஹை கிளாஸ் குடும்பத்துப் பிரச்னைகளைச் சொல்லியிருக்கிறோம். பணக்கார வீட்டுக்கு மருமகளாகப் போகும் 'கல்கி' என்ற பெண்ணின் கதை இது. கதைக்களன் ரொம்ப ரிச்சா இருக்கும்".

சுபா வெங்கட் திரைக்கதை, வசனம் எழுத, சிவா இயக்குகிறார்.

"குடும்பம், குங்குமம், கோலங்கள், இப்ப கல்கி.. என்னோட 'கே' சென்டிமெண்ட் நிச்சயமா வர்க் அவுட் ஆகும்" என்று ஹீரோ அபிஷேக் நம்பிக்கை தெரிவிக்க, குஷ்பு குஷிப்பூவானார்.

அவ்விடத்திலும் குங்குமம், கோமேஸ்வரி, என 'கே' சென்டிமெண்ட் தொடருதே!

- டாலி




மூவேந்தர் முன்னணி கழகத்தின் தலைவர் இவர். "முக்குலத்தோர் கணிசமாக கந்துவட்டி, ஜெயின் கடை பிஸினஸ் செய்து வந்தனர். இந்த இரண்டிலும் கை வைத்துவிட்டது ஆளுங்கட்சி. இது, தவிர, கோயில் களில் ஆடு, கோழி பலியிட தடை போடப்பட்டது. இந்தக் காரணங் களினால் முக்குலத்தோர், ஆளுங்கட்சி யின் மீது மிக்க அதிருப்தியாக இருக்கிறார்கள். தேர்தலில் அது பிரதிபலிக்கும்" என்று சொல்கிறார் டாக்டர். சரியான கணிப்புதானா என்பதை தேர்தல் சொல்லி விடும்.



* வரவேற்ற புலி பொம்மை

* "தமிழகத்தின் மூன்றாவது பெரிய சமூக மான முக்குலத்தோர் அனைவரும் அ.தி.மு.க. ஆதரவாளர்கள் என்ற தோற்றத்தை உருவாக்கி வைத்திருக்கிறது ஆளுங் கட்சி, அது கொஞ்சமும் சரியல்ல" என்கிறார் டாக்டர் சேதுராமன். முக்குலத்தோர் மத்தியில் கொஞ்சம் பாப்புலராக இருக்கும் அகில இந்திய

* சென்னையில் உள்ள ஆளுங்கட்சிப் பிரமுகர்கள் 'செம' கடுப்பில் இருக்கிறார் களாம். காரணம், தேர்தல் நெருக்கத்தில் சி.எம்.டி.ஏ. அதிகாரிகள் செய்யும் கழுத் தறுப்பு வேலைதான். வழக்கமாக தேர் தல் சமயங்களில், ரியல் எஸ்டேட் மற் றும் கட்டட பிரமோட்டர்கள் கணிசமாக நிதி கொடுப்பார்கள். ஆனால் பிரமோட் டர்களின் கட்டட அனுமதி விண்ணப்

பங்களும், மற்ற வேண்டுகோள்களும் சி.எம்.டி.ஏ. அதிகாரிகளால் தாமதப்படுத்தப்பட்டும், திருப்பி அனுப்பப்பட்டும் வருவதால், அவர்கள் நொந்து போய் இருக்கிறார்கள். விளைவு, ஆளுங்கட்சிக்கு நிதி தருவதில் சுணக்கம். இந்த நிலையைச் சரி செய்ய முயல்கிறார்கள் ஆளுங்கட்சியினர்.

• வை.கோ.வை வரவேற்க மதிமுகவினர் வேலூர் சிறைச்சாலை முன்பு திரண்டார்கள் அல்லவா! அதில் டாடா சுமோவில் வந்த ஒரு குழுவினர், கையில் அட்டகாசமான புலி பொம்மையுடன் வை.கோ.வை வரவேற்கக் காத்திருந்தார்கள். இதைப் பார்த்த கட்சி முன்னணியினர் "யாருப்பா அது.. புலி பொம்மையை உள்ளே எடுத்துப் போடப்பா..' என்று அதட்டும் குரலில் அந்தக் கட்சிக்காரர்களிடம் கேட்டுக் கொண்டார்கள். உடனே புலி பொம்மை சுமோவில் தள்ளப்பட்டு மறைக்கப்பட்டது. பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்குச் சிரிப்பு தாளமுடியவில்லை. இது சிரிப்பென்றால், வை.கோ. சிறையிலிருந்தபோது அவரை 50,000 கி.மீ. நீதிமன்றங்களுக்கு வேனில் கூட்டிச் சென்ற ஓட்டுனர் - காவலர் கைகொடுத்து வழி அனுப்பியது உருக்கம்.

# ரஜினி போட்ட தடை!

• ராமதாஸ் - ரஜினி ரசிகர்கள் மோதல் ஒரு முடிவுக்கு வந்து கொண்டிருக்கிறது. இருந்தாலும் ஆங்காங்கே சில அ.தி.மு.க. பிரமுகர்கள், ரஜினி ரசிகர்களை ராமதாஸுக்கு எதிராகப் போஸ்டர் போடத் தூண்டிவிட்டு, நிதி உதவியும் செய்வதாகச் சொல்கிறார்கள் பா.ம.க. பிரமுகர்கள். ரசிகர் மன்றத் தலைவர் சத்திய நாராயணா, கடலூர், விருத்தாசலம் போன்ற வன்னியர் பகுதிகளுக்குச் விசிட் செய்து "சரியான நேரத்தில் தலைவர் கட்டளையிடுவார். தயாராக இருங்கள்" என்று பேசினாராம். இதுதான் ராமதாஸின் கோபத்துக்குக் காரணம். இப்போது பா.ம.க. தரப்பு, ரஜினியைச் சந்தித்து சமாதானப்படுத்தியிருக்கிறது. தேர்தலின் போது வழக்கம் போல இந்த முறையும் ரஜினி காணாமல் போய் விடுவாராம். "முடியும் தேர்தல் வரை சுற்றுப் பயணம் செய்ய வேண்டாம்" என்று சத்திய நாராயணாவுக்குத் தடை போட்டிருக்கிறாராம் ரஜினி.



• ஜெயலலிதா



• மலைச்சாமி



• ராமதாஸ்

• செல்வ கணபதி, பி.ஹெச். பாண்டியன், மலைச்சாமி ஆகியோருக்கு இந்த முறை அம்மா சீட்டு கொடுத்தால், அது அவர்களின் பூர்வ ஜென்மப் புண்ணியமே!

- கௌசி

படம் : மீடியா ராமு

# இபாங், குபாங், சபாங்!

ஆறு வயது வாண்டு ஒன்னு; இரண்டரை வயது நண்டு ஒன்னு. அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கும் நண்டுவின் காதில் 'கூ' என்று கூச்சலிட்டு, பயமுறுத்தி எழுப்புவதில் தொடங்குகிறது ரகளை. தம்பிப்பயல், அவசர அவசரமாக 'நம்பர் ஒன்' போய்விட்டு, உடையை (அதுவும் அரைகுறையாக) சரி செய்து கொண்டு ஓடி வருகிறான். ஹோம்வர்க் செய்து கொண்டிருக்கும் வாண்டு அண்ணன், 'ஒன், டூ, த்ரீ' என்று எண்ணிக் கொண்டிருக்கும் போது, அதி புத்திசாலித்தனமாக 'டென்' என்று விடையைச் சொல்லி முடித்துவிட்டு... ஜூனியர் ஹார்லிக்ஸை 'மடக் மடக்' என்று குடித்து மகிழ்கிறான் தம்பிப் பயல். கூடவே அண்ணனுக்கு செல்லமாய் ஒரு முத்தம். இரவு, படுத்துக் கொண்டிருக்கும் அண்ணன் மீது நண்டுத் தம்பி, பிளாஸ்டிக் கரு வண்டை எடுத்து நைஸாகப் போட்டு, பழி தீர்த்துக் கொள்கிறான்... பாலு மகேந்திரா ஸ்டைலில் கவிதை போன்ற ஹார்லிக்ஸ் விளம்பரத்தை ரசிக்காதவர்களே கிடையாது!

''ஒன்னு மட்டும் ஏன் குடிக்கணும்?'' இதுவும் இன்னொரு ஹார்லிக்ஸ் சுவாரசியம். மழலைப் பட்டாளம் ஒன்று மலை மேல் ஏறி, சைக்கிளில் தாவி, மரத்திலிருந்து தொங்கி, 'இபாங் குபாங், சபாங்' பாடியவாறு, கோப்பைகளில் ஹார்லிக்ஸைச் சுழற்றிக் கரைப்பது... தில்லாலங்கடியான, விளம்பரம்தான்!

ஜெ.வால்டர் தாம்ஸன் விளம்பர நிறுவனத்தின் மும்பை கிளையில் படமாக்கப்பட்டுள்ள இந்த விளம்பரப் படத்தை, நிலாய்சென், சுவாதி பட்டாச்சார்யா இயக்கியுள்ளார்கள்.

''ஹார்லிக்ஸ் என்றாலே, வயதானவர்களும், நோயாளிகளும், குடிக்கும் பானம் என்ற கருத்து மாறிவிட்டது. இது ஒரு ஃபன் டிரிங்க் என்பதை வலியுறுத்தவே, இப்படி ஒரு விளம்பரப்படம் தயாரித்தோம். வேண்டா வெறுப்பாகக் குடிக்கத் தேவையில்லை; குழந்தைகளே விரும்பிக் கேட்டு சுவைத்து மகிழ்கிறார்கள் என்று தெரிவிக்கும் விதத்தில், படு உற்சாகமான










தொனியில் ஸ்க்ரிப்ட் அமைத்தோம். சக்சஸாகி விட்டது'' என்று காலர் தூக்கி விட்டுக் கொள்கிறது விளம்பர டீம்.

'இபாங், குபாங், சபாங்' என்றால் என்ன அர்த்தம்?

அர்த்தம் ஒன்றும் கிடையாது. இது வங்காள சொற்றொடர்... கொல்கத்தா குழந்தைகள் மிக சகஜமாக உபயோகிப்பார்கள்... உற்சாகமாக இருக்கும்போது, சொல்லப்படும் மஜா வார்த்தை'' என்கிறார் ஜிங்கிளின் இசையமைப்பாளர் ஷாந்தனு மோஹிட்ரோ.







ஷாந்தனு, வங்காளி என்பதால், விளம்பர இசையில் இலேசாக வங்காள பாதிப்பு இருந்தாலும், நாட்டின் மூலை முடுக்கில் உள்ள எல்லாக் குழந்தைகளுமே 'இபாங், குபாங், சபாங்'னு பாட வைத்து விட்டதாமே!

கடைசி மடக்கு: ஹார்லிக்ஸ் அதிகமாக விற்பனையாவது, தென்னிந்தியா மற்றும் கிழக்கு இந்திய மாகாணங்களில் மட்டும்தானாம்!

- ரமாமணி சுந்தர்









''' 'கஜானா காலி' என்று பொருள் வரும்படி ஒரு புலம்பல் கவிதையை இயற்றித் தாருங்கள் புலவரே!''

''எதற்கு மன்னா?''

''என்னிடம் பரிசிலை எதிர்பார்த்து பாடவரும் புலவர்களிடம் நான் பதிலுக்குப் பாடி அனுப்பிவிடத்தான்!''

- கிரிஜா மணாளன்

# அதுக்கும டீப்பா?

''அரசியலில் குதிப்பீங்களா?''

''குதிப்பதா... அதுக்கெல்லாம் டூப்தான்...''

- எஸ்.மோகன்



''தனக்கு கீழே பல பேரு வேலை பார்க்கறாங்கனு சொல்லிட்டுப் போறாரே... என்னவா இருக்காரு?''

''பதினாலாவது மாடில ப்யூனா''

- அஜீத் லால்



''தேர்தல் பிரச்சார மேடையிலே தலைவர் தத்துவம் சொல்றதை நிறுத்தணும்னு சொல்றியே!''

''ஏன்?''

''பின்னே, டூ மச்சா போறாரேப்பா! நேத்தைக்கு மீட்டிங்குல 'கொசு கடிச்சா நாம அடிக்கலாம். ஆனா திருப்பிக் கடிக்க முடியாது'ன்னு சொல்றாரு!''

- ஆசுரா





வார இறுதி ஆசனம்
PEACEFUL
Pondicherry
Give time a break.
அமைதியான பாண்டிச்சேரியை அனுபவியுங்கள். துயரமில்லாமல் சுலபமாக ஓய்வெடுப்பது எப்படி என்று புரிந்து கொள்ளுங்கள்.
மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்: பாண்டிச்சேரி சுற்றுலா: தொலைபேசி: 91-413-2334575/2333590/2330532. :பேக்ஸ்: 91-413-2330532. இ-மெயில்: e_pttdc@sify.com இணைய தளம்: www.tourisminpondicherry.com
McCANN/PT/11-03

# ஜாலியா விளையாடுங்க!



**வ**ழக்கமாக, சென்னையில் கிரிக்கெட் மேட்ச் என்றால், இரு தரப்பு கிரிக்கெட் வீரர்களும் சென்னை சேப்பாக்கம் ஸ்டேடியத்தில்தான் நெட் பிராக்டிஸ் செய்வார்கள். ஆனால், சில மாதங்களுக்கு முன் சென்னைக்கு வந்திருந்த நியூஸிலாந்து அணிவீரர்கள், புதிய கிரிக்கெட் மைதானம் ஒன்றில் பயிற்சி செய்தார்கள். ''இந்த மைதானம், உலகத்தரத்துக்கு இணையாக இருக்கிறது. மிக நன்றாக பராமரிக்கப்படுகிறது. இந்த இடம் எங்களுக்கு மிகவும் பிடித்துள்ளது'' என்று சர்டிபிகேட் கொடுத்துவிட்டுப் போனார்கள்.

நியூஸிலாந்து கிரிக்கெட்டர்கள் நற்சான்றிதழ் வழங்கிய மைதானம், கிழக்குக் கடற்கரைச் சாலையில், மாயாஜால் வளாகத்தில் உருவாகிவரும் 'தி சாம்ப்' விளையாட்டு கிராமத்தில் இருக்கிறது. கடந்த

ஜூலை மாதம், பிரபல கிரிக்கெட் வீரர் கபில்தேவ் இந்த விளையாட்டு கிராமத்தின் பணிகளைத் துவக்கி வைத்தார். இப்போது சுமார் எண்பது சதவிகிதப் பணிகள் முடிந்துவிட்டன. மீதி வேலைகளும் முடிந்து, வரும் ஜனவரி இறுதியில் முழு வீச்சில் செயல்படப் போகிறது.

பதினெட்டு ஏக்கர் நிலப்பரப்பில் விரிந்து கிடக்கிறது 'தி சாம்ப்' விளையாட்டு கிராமம். கிரிக்கெட் ஸ்டேடியம், டென்னிஸ் கோர்ட், ஸ்குவாஷ் கோர்ட், ஷட்டில் பாட்மின்டன், நீச்சல் குளம், டேபிள் டென்னிஸ், ஸ்னூக்கர், கால்ஃப் ஆடுவதற்கு ஒரு மினி மைதானம் என்று பல விளையாட்டுகளுக்கும், ஒரே கூரையின்கீழ் வசதி செய்யப்பட்டுள்ளது என்பது தான் 'தி சாம்ப்' ஸ்போர்ட்ஸ் வில்லேஜின் சிறப்பு அம்சமே!

"ஏற்கெனவே மாயாஜாலில் ஆறு சினிமா தியேட்டர்கள், பௌலிங், வீடியோ கேம்ஸ், போதாக்குறைக்கு, 'அறுசுவை அரசு' நடராஜனின் உணவகம் என்று இருந்தாலும், ஒரு குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் பொழுது போக்கு இடமாக அமைக்க வேண்டும் என்ற நோக்கத்தில் நிறைவேற்றப்பட்டுள்ள திட்டம் தான் இது" என்கிறார், மாயா ஜால் உள்ளிட்ட பென்டா மீடியா நிறுவனங்களின் சேர்மன் வி. சந்திரசேகர்.

• விளையாட்டு கிராமம்




• ஜிம்

"இது போன்ற புது முயற்சியில் நீங்கள் இறங்குவதற்கு வித்திட்டது எது?"

"எப்போதுமே விளையாட்டின்மீது நம் மக்களுக்கு நல்ல ஆர்வம் உண்டு. இதற்கு ஈ.எஸ்.பி.என்., ஸ்டார் ஸ்போர்ட்ஸ் போன்ற சேனல்களுக்கு மக்களிடையே கிடைக்கிற பேராதரவே சாட்சி. அரசாங்கம் எலெக்ட்ரானிக்ஸ், மென்பொருள் துறைகளை அடுத்து,

# தீர்க்கதரிசிக்குப் பாராட்டு!



'தி சாம்ப்' ஸ்போர்ட்ஸ் கிராமத்தின் ஆலோசகர் பிரபல கிரிக்கெட்டர் கிருஷ்ணமாச்சாரி ஸ்ரீகாந்த். அவருடன் ஒரு சில வார்த்தைகள்.

"இந்த ஸ்போர்ட்ஸ் கிராமத் திட்டத்தில் உங்கள் பங்கு என்ன?"

"நான் ஆலோசகர் என்ற முறையில், முழுமையாக என்னை ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறேன். இது அகில இந்திய அளவில் ஒரு புதிய முயற்சி. விளையாட்டுக்கு, பென்டா மீடியா குரூப் நிறுவனம் முக்கியத்துவம் தருவதை விளையாட்டு வீரர் என்ற முறையில் பாராட்டுகிறேன். பென்டா மீடியா சேர்மன் சந்திரசேகர், மற்றவர்கள் மூன்று வருஷம் கழித்து யோசிப்பதை, இன்றே செயல்படுத்தும் தீர்க்கதரிசி."

- சி.எம்.

ஸ்போர்ட்ஸ் மீது கவனம் செலுத்த ஆரம்பித்திருக்கிறது. ஸ்போர்ட்ஸ் மேம்பாட்டுத் திட்டங்களுக்கு வரிச்சலுகை வழங்கியுள்ளது. எனவேதான் இப்படி ஒரு விளையாட்டு கிராமத்தை உருவாக்கியிருக்கிறேன்" என்கிறார்.

பல்வேறு விளையாட்டுகளில், இளைய தலைமுறையினருக்கு ஆர்வம் ஏற்படுத்துவதும், சிறப்பான பயிற்சி அளிப்பதும் இந்த ஸ்போர்ட்ஸ் கிராமத்தின் நோக்கம். எட்டுக் கோடி ரூபாய் பட்ஜெட்டில் இந்த கிராமம் உருவாக்கப்பட்டுள்ளது. விளையாட்டுக்கு மட்டுமின்றி, உடல் நலம் பேணவும் இங்கே ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. நீராவிக் குளியல், மஸாஜ் பார்லர், ஜிம் போன்ற வசதிகளும் உண்டு.

கல்லூரிகள், பள்ளிகளுக்கிடையிலான கிரிக்கெட் போட்டிகள் மட்டுமல்லாமல் பெரிய அளவில் விளையாட்டுப் போட்டிகள் நடத்தவும் வசதிகள் உண்டு. விளையாட்டு வீரர்கள் தங்குவதற்கான காட்டேஜ்கள் கொண்ட ஒரு ரிசார்ட், பன்னாட்டு உணவகம், பார் சகலமும் உள்ளன.

இந்த வில்லேஜின் இன்னொரு ஸ்பெஷாலிடி, இங்குள்ள கிரிக்கெட் உள் விளையாட்டு அரங்கம். ஆம்! இங்கே கிரிக்கெட் ஆடுவதற்கு ஓர் இன்டோர் ஸ்டேடியம் இருக்கிறது. இந்த இன்டோர் கிரிக்கெட் ஆட்டமே சற்று வித்தியாசமானதுதான்.

நீண்ட ஹால். அதனுள்ளே முழுமையாக விரிக்கப்பட்ட தரை விரிப்பு. அதன் மீது கிரிக்கெட் பிட்ச், ஸ்டம்ப்கள் எல்லாம் இருக்கும். ஆனால், ஆடும் இடத்தைச் சுற்றி வலை பொருத்தப்பட்டிருக்கும். உள்ளே ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று ஆங்காங்கே குறிக்கப்பட்டிருக்கும். அந்தந்த இடத்தில் அடித்தால், அத்தனை ரன் அடித்ததாகக் கணக்கு. "சுவாரசியமான விளையாட்டு" என்கிறார் நமக்கு ஸ்போர்ட்ஸ் வில்லேஜை சுற்றிக் காட்டிய ரவி.

'விளையாட்டு, பொழுது போக்கு இரண்டையும் இணைத்து ஸ்போர்டெயின்மெண்ட் என்ற புது வார்த்தையையே உருவாக்கிவிட்டார்களே இந்த மாயாஜாலக்காரர்கள்!

**- எஸ். சந்திரமௌலி**

# 'வாச'மலர்

### அமரர் எஸ்.எஸ்.வாசன் நூற்றாண்டு மலர்

'ஸ்ரீ எஸ்.எஸ்.வாசன் ஔவையார் படத்தின் இந்தக் காட்சியால் ஸெஸில் பி டெமிலையையும், அலெக்ஸாண்டர் கோர்டாவையும் புறமுதுகிடும்படி செய்திருக்கிறார். இதை எண்ணும்போது நாம் பெருமிதம் கொள்ளாமலிருக்க முடியாது... பட உலகில் இந்த ஔவையார் ஓர் அற்புதம். மேனாட்டிலே கூட யாரும் சாதித்து அறியாத அற்புதம் என்று சொன்னால் அது மிகையாகாது' - 'அமரர் கல்கி' வாசனுக்கு அளித்த பாராட்டு இது. இது மட்டுமல்ல. சினிமாவுக்குக் கடும் எதிர்ப்பைத் தெரிவித்துக் கொண்டிருந்த ராஜாஜியையே மூன்று மணி நேரம் அமர்ந்து படம் பார்க்கச் செய்து 'வசிஷ்டர் வாயால் பிரும்மரிஷி பட்டமாகப்' பாராட்டைப் பெற்றவர் வாசன். பத்திரிகைத் துறையிலும், படமெடுக்கும் கலையிலும் முத்திரைகள் பதித்தவர். அவரது பல்கலையில் பயின்றவர்கள் எத்தனையோ, அத்தனை பேருக்கும் அற்புதமான அந்தக் காலத்தின் நேசத்தையும், பாசத்தையும் நினைவுகளில் உலவச் செய்கிறது இந்த மலர். வாசன் நூற்றாண்டு நினைவு மலர்.

**வாசன் பப்ளிகேஷன்ஸ் (பி)லிட்,**
**757, அண்ணாசாலை, சென்னை - 2**
**விலை ரூ. 100/-**




### கண்களில் நகலெடுத்து - சி. பொன்னுசாமி

அகமும் புறமும்தான் ஆண்டவன் அளித்த வாழ்க்கையே. அதில் அனுபவங்களைச் சொல்ல அற்புதமான, அழகான வழி கவிதையே. அடுக்கு மல்லிச் சரமாக அர்த்தங்களைக் கூறும் புறமும், ஆனந்தமும், அழுகையையும் கூறும் அகமும், சிறு சிறு கதைகளைக் கூறும் கவிதைகளாய்த் தொகுத்த, மண் வாசம் மாறாத பண்களின் தொகுப்பு.

**குமரன் பதிப்பகம்,**
**3, முத்து கிருஷ்ணன் தெரு, தி. நகர்,**
**சென்னை - 17 விலை ரூ. 60/-**



### யாழ்ப்பாணத்து மண் வாசனை - வண்ணை தெய்வம்

இனம் பிரிந்து போனதால், நிலம் களம் என்று ஆனது. நிலம் களம் என்று ஆனதால், தமிழ் புலம் பெயர்ந்து போனது. தளம் எங்கே அமைந்தாலும் தமிழ் மறவா இனம், தாய் நிலம் நினைத்து தினம் அழும். நாடுகள் வேறாகிக் கூடுகள் பிரிந்தாலும், எங்கோ வாழுகின்ற, வாடுகின்ற மனங்களின் தத்தம் நிலங்களைப் பற்றிய நினைவுகளின் தொகுப்பு.

**மணிமேகலை பிரசுரம்,**
**7, தணிகாசலம் தெரு,**
**தி. நகர், சென்னை - 17**
**விலை ரூ. 100/-**

**- விஷ்வக்**



இண்டர்காமில் மேலும் சில விநாடிகள் பேசிவிட்டு ரிஸீவரை அதனிடத்துக்குக் கொடுத்த ஆதித்யாவின் முகம் வியர்வைப் பூச்சுக்கு உட்பட்டிருந்தது.

"மிஸ் வைகை..."

"ஸார்..."

"நீங்களும் நானும் உடனே அக்கௌண்ட் செக்ஷனுக்குப் போகணும்..."

"ஸார்... எனிதிங் ராங்...?"

"ஐ.டி. பீப்பிள் வந்திருக்காங்க..."

வைகையின் உதடுகளில் சின்னப் புன்னகை. "ஐ.டி.பீப்பிள்தானே...? வரட்டுமே...!"

"என்ன வைகை... அவங்க நம்மோடு உட்கார்ந்து டீ சாப்பிட வரலை. தே ஹேவ் கம் ஃபார் எ ரெய்ட்" ஆதித்யா படபடக்க வைகையின் புன்னகை பெரிதாயிற்று.

"ஸார்...! வரி ஏய்ப்பு செய்யறவங்கதான் ஐ.டி. பீப்பிளைப் பார்த்து பயப்படணும். நம்ம ஹாஸ்பிடலோட அக்கவுண்ட்ஸ் எல்லாமே க்ரிஸ்டல் கிளியரா இருக்கு. நாம எதுக்காக பயப்படணும்?"

"அக்கவுண்ட்ஸ் சரியாய் இருந்தாலும், அவங்க ஆயிரத்தெட்டு கேள்விகளைக் கேட்டு ஒரு வழி பண்ணிடுவாங்களே? அப்பா வேற ஊர்ல இல்லை..."

"ஸார்... அவங்க கேட்கப் போகிற அந்த ஆயிரத்தெட்டு கேள்விகளுக்கும் என்கிட்டே பதில் இருக்கு. நீங்க எதுவும் பேச வேண்டாம். நான் பேசிக்கறேன்... லெட் அஸ் கோ. அவங்க வெயிட் பண்ணிட்டிருப்பாங்க... ஸார்..."

"உங்களால அவங்களை ஃபேஸ் பண்ண முடியுமா?"

"யூ டோண்ட் வொர்ரி ஸார்... ஐ...கேன்..." லிஃப்ட் காலியாகக் காத்திருக்க, அதில் நுழைந்து கிரௌண்ட் ஃப்ளோரிலிருந்த அக்கவுண்ட் - செக்ஷனுக்கு வந்தார்கள். செக்ஷன் ஊழியர்கள் ஓர் ஓரமாய் நிறுத்தப்பட்டிருக்க, ஆஷ் க்ரே வண்ண சபாரி அணிந்த ஐந்து பேர் இறுகிய முகங்களோடு தெரிந்தார்கள். ஆதித்யாவைப் பார்த்ததும் வழுக்கைத்தலை நபர் ஒருவர் பக்கத்தில் வந்தார். தன்னுடைய ஐ.டி. கார்டை, காட்டிவிட்டு சன்னமான குரலில் கேட்டார்.

"மிஸ்டர் ஆதித்யா...?"

"எஸ்..."

"சென்ற வருடம் நீங்கள் ரிடர்ன் ஃபைல் செய்ததில் எங்களுக்குச் சில சந்தேகங்கள்... அந்த சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொள்ள வந்திருக்கிறோம். உங்களுடைய ஒத்துழைப்பு தேவை." அவர் ஆங்கிலத்தில் பேச, வைகையும் ஆங்கிலத்தில் குறுக்கிட்டாள்.

"எக்ஸ்க்யூஸ் மீ...! அவர் வெளிநாட்டிலிருந்து நேற்றைக்குத்தான் வந்திருக்கிறார். நீங்கள் ஏதாவது சந்தேகம் கேட்க வேண்டுமென்றால், என்னைத்தான் கேட்க வேண்டும்..."

# 5 கோடி கோடி மின்னல்கள்

"நீங்கள்...?"

"ஐயாம் வைகை... அஸிஸ்டெண்ட் அக்கவுண்ட்ஸ் ஆபீஸர்..."

"தென் நோ பிராப்ளம்... இங்கே மொத்தம் பதினொரு பீரோ இருக்கிறது. அதற்கான சாவிகள் வேண்டும்..."

"ஒன் மினிட் ஸார்" சொன்ன வைகை தன்னுடைய மேஜைக்குப் போய் இழுப்பறையைத் திறந்து, சாவிக் கொத்து ஒன்றை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தாள். "ஒவ்வொரு பீரோவுக்கும் ஒரு நெம்பரும், அந்த நெம்பர் சாவியிலும் என்க்ரேவ் செய்யப்பட்டிருக்கிறது ஸார். நீங்கள் நிதானமாய் ஒவ்வொரு பீரோவையும் திறந்து, தேவைப்பட்ட ரிக்கார்ட்ஸ்களையும் ஃபைல்களையும் பார்க்கலாம்."




வழுக்கைத்தலை சாவிக்கொத்தை வாங்கிக் கொண்டு, வைகையைப் பார்த்து புன்னகை செய்தது.

“பொதுவாக நாங்கள் சோதனைக்குப் போகும் இடங்களில் எங்களைப் பார்த்ததுமே பேச வாய் வராமல் வியர்த்து வழிவார்கள். சாவிக் கொத்தைக் கேட்டால் மானேஜர் எடுத்துக் கொண்டு போய் விட்டார் என்றோ, காணாமல் போய் விட்டது என்றோ சொல்வார்கள். ஆனால் நீங்கள் கொடுக்கும் ஒத்துழைப்பு என்னை வியக்க வைக்கிறது.”

வைகை தன் தோள்களை இலேசாய் குலுக்கிச் சிரித்து விட்டுச் சொன்னாள், ‘‘ஸார்...! இது ஒரு மாஜி மந்திரியின் ஆடம்பர பங்களா கிடையாது. ஹாஸ்பிடல். சேவையை மட்டும் மனத்தில் வைத்துக் கொண்டு செயல்படும் உயர்தர ஹாஸ்பிடல். ஏழைகளும் நடுத்தர வர்க்கமும் இங்கே எட்டிக்கூடப் பார்க்க முடியாது என்கிற குறையைத் தவிர, வேறு எந்தக் குறையும் இல்லாத ஹாஸ்பிடல். கணக்கு வழக்குகளில் கம்ப்யூட்டரே தப்பு பண்ணினாலும், நாங்கள் பண்ண மாட்டோம். நீங்கள் உங்களுடைய சோதனையைத் தொடங்கலாம் ஸார்.”

அவர் சாவிக் கொத்தோடு பீரோக்களை நோக்கிப் போக, இரண்டு பேர் அவரைத் தொடர்ந்தார்கள். மீதி இருந்த இரண்டு பேர்களில் ஒருவர் அலமாரியை நோக்கிப் போக, இன்னொருவர் ‘வேஸ்ட் பின்’னுக்குப் பக்கத்தில் போய் குத்துக்காலிட்டு உட்கார்ந்து, அதில் கசக்கி வீசப்பட்டிருந்த காகித உருண்டைகளைப் பிரித்துப் பார்க்க ஆரம்பித்தார். வைகை அவருக்குப் பக்கத்தில் போய் குனிந்தாள்.

"என்ன ஸார்... குப்பையில் ஏதாவது கோமேதகம் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறீர்களா....?"

அவர் புன்னகை செய்தார். "இது எங்களுடைய வழக்கமான சோதனை முறைகளில் ஒன்று. நீங்கள் சொன்னது போலவே சில இடங்களில் எங்களுக்கு கோமேதகம் மட்டுமல்ல, வைரமே கிடைத்திருக்கிறது."

"இந்த இடத்தில் அதையெல்லாம் நீங்கள் எதிர்பார்க்க முடியாது ஸார். இந்த 'வேஸ்ட்பின்'னை முடித்ததும் சொல்லுங்கள். இதே செக்ஷனில் இன்னமும் மூன்று 'வேஸ்ட்பின்'கள் இருக்கின்றன. அதையும் கிளறிப் பார்த்து விடுங்கள்."

அந்த அதிகாரி முறைத்ததை பொருட்படுத்தாமல் ஆதித்யாவிடம் வந்தாள் வைகை. ஆதித்யாவின் நெற்றியில் சொத சொதவென்று வியர்வை. இடது கையில் கசக்கி வைத்திருந்த கர்ச்சீப், பத்து விநாடிகளுக்கு ஒரு முறை நெற்றிக்குப் போய் காரின் வைப்பர் போல் அழித்து விட்டு வந்தது.

"ஸார்... பி... கம்ஃபர்டபிள்... இவ்வளவு ரெஸ்ட்லஸ்ஸா நீங்க இருக்க வேண்டியதே இல்லை..."

"நோ வைகை... ஐ.... ஃபீல் கில்டி.. ஐ.டி. விஷயத்தில் நாம் நேர்மையா இருந்திருக்கோம்... டேக்ஸ் ஒழுங்கா 'பே' பண்ணியிருக்கோம். இப்படி அதிரடியா ரெய்ட் வர்றது நமக்கு அவமானம் இல்லையா?"

"இது அவமானம் கிடையாது ஸார். கல்லடி."

"கல்லடியா...?"

"ஆமா ஸார்...! காய்த்த மரம்தான் கல்லடி படும்னு சொல்வாங்க... தமிழ்நாட்டிலேயே நெம்பர் ஒன் ஹாஸ்பிடல் நம்முடைய ஹன்ஸா ஹாஸ்பிடல்தான். பேஷண்ட்களின் 'க்யூர் ரேட்' மற்ற ஹாஸ்பிடல்களைக் காட்டிலும் இங்குதான் அதிகம் என்கிற உண்மையை, நம்முடைய எதிரிகளால் ஜீரணித்துக் கொள்ள முடியலை. அந்த அஜீர்ணத்தின் வெளிப்பாடு தான் இந்த ரெய்ட்."

"இங்கே அக்கௌண்ட்ஸெல்லாம் சரியா இருக்குமா வைகை? எதையாவது தோண்டி துருவி எடுத்துடப் போறாங்க...!"

வைகை புன்னகை செய்தாள். "ஸார்... இங்கு எல்லாமே துல்லியம். யாரும் எதையும் தோண்டவும் முடியாது. துருவவும் முடியாது."

சோதனையில் அரைமணி நேரம் கரைந்திருந்தபோது, ஏழாம் எண் பீரோவுக்குப் பக்கத்தில் நின்றிருந்த வழுக்கைத்தலை, "மிஸ் வைகை" என்று திரும்பிப் பார்த்துக் கூப்பிட்டது. கையில் கம்ப்யூட்டர் பிரசவித்த பிரிண்ட் அவுட் தாள்கள்.

"எஸ்..." பக்கத்தில் போனாள் வைகை. வழுக்கை இப்போது தமிழில் பேசியது.

"போன வருஷம் இந்த ஹாஸ்பிடலில் மொத்தம் 721 பைபாஸ் சர்ஜரி நடந்திருக்கு இல்லையா?"

"ஆமா ஸார்."

"அதாவது சராசரியாக நாள் ஒன்றுக்கு ரெண்டு சர்ஜரி."

"எஸ்..."

"பட்... இந்த ஸ்டேட்மெண்ட்ல 711 சர்ஜரிக்குத்தான் பில் பண்ணியிருக்கு. மீதி பத்து சர்ஜரிக்கு பில் பண்ணலை...ஏன்..?"



"அந்த பத்து சர்ஜரியும் ஃப்ரீயா செய்யப்பட்டது ஸார்."

"அவங்க யார் யார் என்கிற விபரங்களை அட்ரஸோடு தர முடியுமா...?"

"ரக்ஷா, நேயம், நிழல், கருணாலயா போன்ற முதியோர் இல்லங்களில் இருக்கிற பத்துப் பேருக்கு செய்யப்பட்டிருக்கு. இதை நீங்க அங்கேயே போய் க்ராஸ் செக் பண்ணிக்கலாம்."

"வருஷா வருஷம் இந்த ஃப்ரீ சர்வீஸ் உண்டா?"

"தேவையைப் பொறுத்து உண்டு."

"இந்த ஹாஸ்பிடல் பார்மஸிக்கு மருந்துவமனை சப்ளை பண்ற பார்மசுடிகல்ஸ் கம்பெனிகளின் லிஸ்ட் வேணுமே?"

"ஒரு நிமிஷம்..." சொன்ன வைகை பக்கத்தில் இருந்த கம்ப்யூட்டருக்கு முன்னால் போய் உட்கார்ந்து, கீ போர்டின் பட்டன்களைத் தட்டினாள். அடுத்த சில விநாடிகளில் பிரசவமான பிரிண்ட் அவுட் தாளைக் கிழித்து அவருடைய கையில் கொடுத்தாள்.

அதற்குப் பிறகு கிட்டத்தட்ட மூன்று மணி நேரம்.

பிரோக்களில் இருந்து வெளிப்பட்ட நூற்றுக் கணக்கான ஃபைல்கள் புரட்டப் பட்டு, சந்தேகப் பார்வையோடு கேட்கப் பட்ட எல்லாக் கேள்விகளுக்கும் ஒரு விநாடி கூட யோசிக்காமல், நெற்றியைக் கீறாமல், வைகை பதில் அளிக்க, ஆதித்யா பிரமிப்பில் உறைந்து போனான்.

ஐ.டி. அதிகாரிகள் இரண்டரை மணிக்கு மேல் தான் புறப்பட்டார்கள். ஆதித்யாவின் கையைப் பிடித்துக் கொண்டு வழுக்கை சொன்னது.

"ஸாரி ஸார்..! உங்களுடைய ஹாஸ்பிடலைப் பற்றி எங்களுக்குக் கிடைத்த எல்லாத் தகவல்களும் பொய்யானது. கணக்கு



வழக்குகளில் எந்த இடத்திலும் ஒரு சிறிய தவறு கூட இல்லை."

பக்கத்தில் வந்து நின்ற வைகை சிரித்தாள்.

"ஸார்...! மூன்று மணி நேரம் உங்களுக்கு வேஸ்ட். அரசியல்வாதி வீட்டுக்கோ இல்லேன்னா சினிமா நடிகை வீட்டுக்கோ போயிருந்தா, சில கோடிகளை உருட்டிக் கிட்டு போயிருக்கலாம்."

"நியாயம்தான்...! வரட்டுமாம்மா எம்.சி...?"

வைகை திகைத்தாள்.

"ஸார்... என்னோட பேர் எம்.சி. இடையாது. வைகை."

"தெரியும். நாங்க உங்க பேரை எம்.சின்னு மாத்திட்டோம்..."

"எம்.சின்னா...?"

"மொபைல் கம்ப்யூட்டர்."

ஹாஸ்பிடல் கான்டீனில் எதிரெதிரே உட்கார்ந்து பப்ஸை மென்று, டீ குடித்துக் கொண்டிருந்தார்கள் வைகையும் அர்ச்சனாவும். நேரம் சாயந்தரம் நாலரை.

"வைகை! இன்னிக்கு 'டாக் ஆஃப் த ஹாஸ்பிடல்' நீதான்... ரெண்டு டாக்டர்ஸோ... ரெண்டு நர்ஸோ... சந்திச்சுகிட்டா உன்னைப்பத்தித்தான் பேசறாங்களாம்..."

வைகை புன்னகை செய்தாள். "அக்கௌண்ட்ஸ் செக்ஷனில் வேலை பார்க்கிற நான், ஐ.டி. பீப்பிளை ஃபேஸ் பண்ணினேன்... அது என்னோட கடமை. அக்கௌண்ட்ஸ் எந்த குளறு படியும் இல்லாமே கிளியரா இருந்தது. பார்த்தாங்க, போயிட்டாங்க. இதுல என்னோட அட்வென்ச்சர் என்ன இருக்கு அர்ச்சனா...? ஐ டிட் மை ஜாப்..."

"இருந்தாலும் அவங்களை தைரியமா ஃபேஸ் பண்ணினியே! அந்தத் துணிச்சல் எத்தனை பேருக்கு வரும்...? சீஃப் டாக்டரோட சன் ஆதித்யா, அந்த மூணு மணி நேரத்துல அப்படியே ஆடிப் போயிட்டார். இன்னும் ஒரு வாரத்துக்கு ஹாஸ்பிடல் பக்கமே எட்டிப் பார்க்க மாட்டார்ன்னு நினைக்கிறேன்."

"நானும் உங்க கூட ஜாய்ன் பண்ணிக்கலாமா, மிஸ் வைகை...?" தனக்குப் பின் பக்கம் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள் வைகை.

இளஞ்செழியன் தோளில் தொங்க விட்ட ஜோல்னாப் பையோடு, மார்புக்குக் குறுக்கே கைகளைக் கட்டியபடி நின்றிருந்தான்.

"ஓ... இளஞ்செழியன்....வாங்க..! எங்கே இவ்வளவு தூரம்... ஹாஸ்பிடல்ல யாரை யாவது பார்க்க வந்தீங்களா...?"

"இந்த ஹாஸ்பிடலில் எனக்குத் தெரிஞ்ச ஒரே முகம் நீங்கதான்... உங்களைத்தான் பார்க்க வந்தேன்..."

"என்ன விஷயம்...? உட்காருங்க..." சொன்ன வைகை, அர்ச்சனாவிடம் திரும்பினாள். "அர்ச்சனா! இவர் 'மெட்டியோசை' பத்திரிகையின் க்ரைம் ரிப்போர்ட்டர் இளஞ்செழியன்."

இருவரும் "ஹலோ..." சொல்லிக் கொண்டபின் அர்ச்சனா கேட்டாள், "பத்திரிக்கை எப்படி போயிட்டிருக்கு...?"

"அமோகம்...! வாரத்துக்கு ஆறு லட்சம் காப்பீஸ். ஹாட் கேக் ஸேல்... பெண்களுக்கான பத்திரிகைகளில் மெட்டியோசைக்குத்தான் முதலிடம்."

"கேட்கவே ஆச்சரியமாயிருக்கு... இந்த இண்டர்நெட் யுகத்துல ஒரு பத்திரிகை

கோகுலம்
மார்ச் 2004 ரூ.6/- மட்டுமே




# கிளித் தலை இளவரசி!

-புதிய சித்திரத் தொடர்கதை ஆரம்பம்

கதை : குறும்பலாப்பேரி பாண்டியன் படம் : லலிதா

இவ்வளவு விக்குதா...?"

"எங்களுக்கும் அதே ஆச்சரியம்தான்..."

"சொல்லுங்க இளஞ்செழியன்! என்ன விஷயமா என்னைப் பார்க்க வந்திருக்கீங்க...?"

"அது... வந்து..." என்று இளஞ்செழியன் தயங்கிக் கொண்டிருக்கும்போதே, வைகையின் இடது கையில் இடம் பிடித்திருந்த செல்ஃபோன் நீலநிற ஒளியோடு ஒளிர்ந்து சிணுங்கியது.

காதுக்கு ஒற்றினாள்.

"ஹலோ..."

"யாரு வைகையா?" ஆண் குரல் உரிமை எடுத்துக் கொண்டு கேட்டது.

"ஆமா... நீங்க...?"

"நான் நித்தியானந்தம் பேசறேம்மா. தயாநிதி அறக்கட்டளையின் தலைவர்."

"ஓ... நீங்களா...! சொல்லுங்க ஸார்."

"நாங்க கொடுத்த செக்கை பேங்க்ல போட்டுட்டியாம்மா?"

"போட்டாச்சு சார்."

"எங்க பங்குக்குரிய பணம் எப்ப கிடைக்கும்?"

"நாளைக்கு காலையில் பதினொரு மணிக்கு பேங்குக்குப் போய் பணத்தை எடுத்துக்கிட்டு, நானே உங்க இருப்பிடத்துக்கு வர்றேன் ஸார்."

"மறந்துடாதேம்மா..."

"உங்களையெல்லாம் மறக்க முடியுமா ஸார்? நாளைக்குக் காலையில் பதினொரு மணிக்கெல்லாம் பணத்தோடு உங்க முன்னாடி இருப்பேன். சொல்லிவிட்டு செல்போனை அணைத்தாள் வைகை. அர்ச்சனா கை கழுவ வாஷ்பேசினுக்குப் போயிருக்க, எதிரில் உட்கார்ந்திருந்த இளஞ்செழியன் கேட்டான்,

"போன்ல யாருங்க...?"

கோபமாய் நிமிர்ந்தாள் வைகை. "லுக் மிஸ்டர் இளஞ்செழியன்! இது உங்களுக்குத் தேவையில்லாதது."

அவன் நாற்பத்தைந்து டிகிரி கோணத்தில் தலையைச் சாய்த்து சிரித்தான்.

"உங்க கூட பேசினது யார்ன்னு நான் சொல்லட்டுமா?"

வைகை கொஞ்சம் திகைப்போடு பார்க்க, அவன் சொன்னான்.

"உங்க கூட பேசினது தயாநிதி அறக்கட்டளையின் தலைவர் நித்தியானந்தம். சரியா மிஸ் வைகை...?"

(தொடரும்)

ஒவ்வொரு அரசிலும் பல இலட்சம் ஊழியர்கள் இருக்கிறார்கள். மத்திய அரசிலோ, மாநில அரசிலோ ஒரு வேலை கிடைத்து விட்டால், வாழ்க்கையில் இனிக் கவலையே இல்லை என்று பெரும்பாலோர் கருதுகிறார்கள்.



# அந்த ஆக்டோபஸ்!

பிரிட்டிஷ் ஆட்சியில் உயர் அதிகாரிகளைக் கொண்டு ஐ.சி.எஸ். என்று அழைக்கப்பட்ட இந்தியன் சிவில் சர்வீஸ் (Indian Civil Service) உருவாக்கப்பட்டது. அந்த சர்வீஸைப் பற்றி வேடிக்கையாக "அது இந்தியனும் அல்ல, அது சிவிலும் அல்ல. அது சர்வீஸ""ம் அல்ல" என்று சொல்லப்பட்டது. அதாவது, அதில் இருந்தவர்கள் இந்தியர்களும் அல்ல, அவர்களுக்குக் கண்ணியமும் கிடையாது, அவர்கள் பணி செய்வதும் கிடையாது என்று சொல்லப்பட்டது!

மத்திய அரசின் தேர்வாணையம் தவிர, வேறு வகையிலும் மத்திய அரசின் ஊழியர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். உதாரணமாக, எழுத்தர், தட்டெழுத்தாளர், சுருக்கெழுத்தாளர் போன்ற பதவிகளுக்கு, ஸ்டாஃப் செலக்ஷன் கமிஷன் (Staff Selection Commission) மூலமாகத் தேர்வு செய்யப்படுகிறது. மத்திய அரசின் பல துறைகள் நேரடியாகவும் பல்வேறு பணிகளுக்குத் தேர்வு செய்கின்றன.

தேர்வுக்குப் பிறகு பயிற்சி அளிக்கப்படுகிறது. ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ் அதிகாரிகளுக்குச் சுமார் இரண்டாண்டுக் காலம் பயிற்சி அளிக்கப்படுகிறது.

தேர்வு, பயிற்சி, ஒழுங்கு விதிகள், ஆண்டுதோறும் ஆய்வு, பதவி உயர்வின்போது மீண்டும் ஆய்வு, என்று பல நிலைகளில் ஓர் அரசு ஊழியருடைய தகுதி ஆராயப்படுகிறது. இவ்வளவு ஆய்வுக்குப் பிறகும் திறமையற்றவர்களும், ஒழுக்கமற்றவர்களும், ஊழல் பேர்வழிகளும் அரசுப் பணிகளில் மலிந்து இருப்பதைக் கண்டு நாம் வெட்கமடைய வேண்டும்.

அரசுப் பணி என்பது தனியார் துறை பணியைப் போன்றதல்ல. தனியார் துறையின் முதல் நோக்கமே இலாபம் ஈட்டுவது. அரசுப் பணி என்பது ஒரு தன்னலமற்ற சேவை.

அத்தகைய நிலை உருவாகவில்லை என்பது மட்டுமல்ல, அதற்கு நேர்மாறாக, அரசுப் பணி என்பது ஒவ்வொரு பறவையும் தனக்கென்று ஒரு கூடு கட்டிக் கொள்வதற்குக் கிடைத்த வாய்ப்பு என்றே பல அரசு ஊழியர்கள் கருதுகிறார்கள். இந்த எண்ண ஓட்டத்தின் விளைவுதான், மெத்தனம், அலட்சியம், ஊழல்.

**ஊ**ழலைத் தடுப்பதற்கு இந்தியாவில்



## நமக்கே உரிமையாம்–18

## ப. சிதம்பரம்



''என்னப்பா புதுசா ஏதோ மெடலெல்லாம் குத்திக்கிட்டிருக்கே... எனக்கே தெரியாம யார் கொடுத்தாங்க உனக்கு...?''

''மாமூல் வாங்கறதுல கனிவான என் பணியைப் பாராட்டி கபாலி குடுத்ததுங்க!''

- அம்பை தேவா

உள்ள கடுமையான சட்டங்களைப் போல் வேறு எந்த நாட்டிலும் இருக்க முடியாது. 1947ஆம் ஆண்டு இயற்றப்பட்ட ஊழல் தடுப்புச் சட்டத்தை மறு பரிசீலனை செய்து, 1988ஆம் ஆண்டில் ஒரு புத்தம் புதிய ஊழல் தடுப்புச் சட்டத்தை நாடாளு மன்றத்தில் நிறைவேற்றினோம். இந்தக் கடுமையான சட்டத்திற்குப் பிறகும் ஊழல் குறையவில்லை. ஊழல் என்பதே இயல்பு. ஊழல் என்பதே நடைமுறை என்று கருதும் அளவிற்கு, அரசுத் துறையில் ஊழல் மலிந்துவிட்டது. ஒரு நேர்மையான அதிகாரி புதிதாகப் பொறுப்பேற்றார் என்றால், அவரை வளைக்க முடியாது என்று தெரிந்துவிட்டால், அவருக்குப் 'பிழைக்கத் தெரியாதவர்' என்ற பட்டத்தைச் சூட்டிவிடுவார்கள்.

உத்தரப் பிரதேச மாநிலத்தில் ஒரு பழக்கம் நடைமுறையில் உள்ளதாகப் பலர் என்னிடம் கூறியிருக்கிறார்கள். ஓர் அதிகாரி ஊழலில் ஈடுபட வேண்டும் என்று கட்டாயமில்லை. அவர் நேர்மையாளராகவே இருந்துவிட்டுப் போகலாம். ஆனால் don't ask, don't tell. அதாவது, ஊழல் நடக்கிறதா என்று கேட்காதே. ஊழல் நடந்தால் அதைக் காட்டிக் கொடுக்காதே என்ற பழக்கத்தைப் பண்பாகவே உத்தரப் பிரதேச மாநிலத்தில் வைத்துக் கொண்டுள்ளார்கள்!

''இது என்ன கல்யாணப் பத்திரிக்கைல 'தொடரும்'னு போட்டு இருக்கு...?''

''இது அந்த நடிகையோட முதல் கல்யாணமாம்!''

- ஆர். முத்துவேல்



'ஆனஸ்டி இன்டர்நேஷனல்' என்ற அமைப்பு ஒவ்வொரு ஆண்டும் ஒரு பட்டியலை வெளியிடுகிறது. உலக நாடுகளில் எந்த அளவிற்கு ஒவ்வொரு நாட்டிலும் ஊழல் மலிந்திருக்கிறது என்பதை ஆராய்ந்து, அதில் வெளியிடுகிறது. இதில் முதல் இடங்களில் இருக்கும் நாடுகள் கனடா, நியூசிலாந்து, டென்மார்க் போன்ற ஜனநாயக நாடுகள். எதேச்சாதிகார அல்லது சர்வாதிகார ஆட்சி நடைபெறும் நாடுகள் கடைசி இடங்களை ஆக்கிரமித்துக் கொள்கின்றன. இந்தியா கடைநிலைக்குச் சற்று மேலாக இருக்கிறது. ஊழல் மிகுந்த நாடு என்ற கௌரவத்தை இந்தியா பெற்றிருக்கிறது. அதுபோலவே, இந்திய துணைக் கண்டத்தில் உள்ள எல்லா நாடுகளுமே, ஊழல் மிகுந்த நாடுகள் என்ற "சிறப்பை"ப் பெற்றுள்ளன.

இந்தியாவில் அரசுப் பணிகளில் ஊழல் மலிந்திருப்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. முதல் காரணம், அரசியல் தலைவர்கள் (அதாவது ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் தலைவர்கள்) ஊழல் பேர்வழிகளாக இருக்கிறார்கள். தலைமையில் ஊழல் என்றால், அந்தத் தலைமை எப்படி ஒழுக்கத்தை நிலைநாட்ட முடியும்? நமக்கு அறிமுகமான அரசியல் தலைவர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் பாருங்கள். பிறப்பு எப்படி, வளர்ப்பு எப்படி, என்ன தொழில், என்ன வருமானம் என்ற கேள்விகளுக்குக் கிடைக்கும் பதில்களையும், இன்று அந்தத் தலைவர்களிடம் இருக்கும் செல்வச் செழிப்பையும் ஒப்பிட்டுப் பார்த்தால், நான் சொல்வதன் பொருள் விளங்கிவிடும்.

ஊழல் மலிந்திருப்பதற்கு இரண்டாவது காரணம், அரசினுடைய பணப் புழக்கம்.

ஊழலுக்கு இன்னொரு காரணம் அரசியல் கட்சிகளின் அகோரப் பசி. அரசியல் கட்சி என்றால் விளம்பரம், ஆடம்பரம், பகட்டு என்றாகிவிட்டது. இவற்றுக்கெல்

வாம் ஏராளமாகப் பணம் தேவைப்படுகிறது. எந்த அரசியல் கட்சியும் இவ்வளவு பணத்தை அக்கட்சியின் செயல்வீரர்களிட மிருந்தோ, நன்கொடைகள் வாயிலாகவோ திரட்ட முடியாது. இவ்வளவு பெரும் பணத்தைத் திரட்ட வேண்டுமென்றால், ஊழலில் ஈடுபட வேண்டும், அல்லது ஊழலை அனுமதிக்க வேண்டும்.

அரசியல் கட்சிகளின் பணத் தேவை தேர்தல் காலங்களில் பல மடங்கு அதிகரித்து விடுகிறது. ஒரு தேர்தலில் ஒவ்வொரு தொகுதியிலும் செலவிடப்படும் பணத்தை நினைத்துப் பார்த்தால் போதும், மயக்கமே வந்துவிடும். ஆந்திர மாநிலத்தில் ஒரு நாடாளுமன்றத் தொகுதியில் ஐந்து கோடி ரூபாயும், ஒரு சட்டமன்றத் தொகுதியில் இரண்டு, மூன்று கோடி ரூபாயும் செலவழிப்பது என்பது சாதாரணமான விஷயம்.

அரசியல் தலைவர்களுக்கும், அரசு ஊழியர்களுக்கும் அச்சம் அறவே இடையாது. நூறு ஊழல் பேர்வழிகளில் ஒருவர் பிடிபடுகிறார். நூறு பேரைப் பிடித்தால், ஒருவர் தண்டிக்கப்படுகிறார். இதுதான் நிலைமை என்றால், யாருக்கு அச்சம் ஏற்பட முடியும்? இந்தியாவில் முக்கியப் பொறுப்பிலிருந்த எந்த அரசியல் தலைவரும், ஊழல் குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டு, அந்தத் தண்டனைக் காலத்தைச் சிறையிலே கழித்தார் என்பதற்கு அண்மைக் காலத்தில் உதாரணங்கள் இடையாது. அதைப் போலவே, பல உயர் அதிகாரிகள் மீது வழக்குகள் தொடரப்படுகின்றன, அவர்கள் கைது செய்யப்படுகிறார்கள், தொலைக் காட்சியிலும், பத்திரிகையிலும் செய்திகள் வருகின்றன. ஆனால் பதினைந்து நாட்கள் கழிந்துவிட்டால், அந்த அதிகாரியைப் பற்றியோ, அவர் மீது சுமத்தப்பட்ட குற்றங்களைப் பற்றியோ மக்கள் நினைவில் கொள்வதில்லை.

வருமான வரித் துறை, சி.பி.ஐ. (CBI) சி.வி.சி. (CVC) என்று பல துறைகள் இருந்த போதிலும், ஊழல் தழைத்தோங்கி நிற்கிறது. இந்தத் துறைகள் வேலிக்கு வேலி. 'வேலியே பயிரை மேய்கிறது' என்பது பழமொழி. வேலியே இன்னொரு மேய்கிற வேலியைப் பாதுகாக்கிறது என்பது புதுமொழி. "மங்கை சூதகமானால் கங்கையில் குளிக்கலாம், கங்கையே சூதகமானால்?" என்று சொல்வதைக் கேட்டிருப்பீர்கள். வருமான வரித் துறை அதிகாரியே சொத்துச் சேர்க்கிறார்; சி.பி.ஐ. அதிகாரியே சட்டத்தை மீறுகிறார்; சி.வி.சி. அதிகாரிகளே லஞ்சம் வாங்கிக் கொண்டு, குற்றம் சாட்டப்பட்டவர்கள் நிரபராதிகள் என்று அறிவிக்கிறார்கள் – இந்த நிலைமை நீடித்தால், ஊழலை எப்படி ஒழிக்க முடியும்?

வேளாண்மை, தொழில் துறை, சேவைத் துறை, ஏற்றுமதி - இறக்குமதி என்று ஒரு நாட்டின் பொருளாதாரத்தின் முக்கியத் துறைகள் எல்லாம் சீரும் சிறப்புமாகச் செயல்பட்டாலும், ஊழல் என்ற ஆக்டோபஸ் எல்லாப் பலன்களையும், எல்லா முன்னேற்றங்களையும் விழுங்கிவிடும். இதில் நாம் மிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

(தொடரும்)

*"நீங்க ஜோக் சொன்னா விழுந்து விழுந்து சிரிக்கிறாரேன்னு இவரை அப்படியே நம்பிடாதீங்க, மானேஜர் சார்!"*

"ஏன்?"

"வெளியே வந்து ஆபீஸ்ல எல்லார்கிட்டயும் சொல்லி 'இதுவும் ஒரு ஜோக்கா'ன்னு சிரிப்பா சிரிக்கிறார்!"

– பம்மல் நாகராஜன்





"வாக்கிங் போகும்போது உங்களால் எப்படி இவ்வளவு வேகமா நடக்க முடியுது?"

"எனக்குப் பின்னாடி கடன் கொடுத்தவங்க வர்றதா மனசுல நினைச்சுக்குவேன்."

– வி. கிருஷ்ணகுமார்

**வ**ந்திருந்த மாலைப் பேப்பர்களை ஒவ்வொன்றாகப் படித்துக் கொண்டிருந்தார் கிருஷ்ணசாமி. 'நான் ஆணையிட்டால் அது நடந்து விட்டால்...'' ரிங்டோன் அவ்வப்போது அமைதியைக் கெடுக்க, விரிவான பேச்சு! முடிந்ததும் ஓங்கி ஒரு சல்யூட்! 'அட மொக்கராசு!' என்று ஜாலியானார் கிருஷ்ணசாமி! ஆரம்பித்தோம்.

*முதல் காதல் மறக்க முடியாதுன்னு சொல்றாங்களே...?*

மறக்க முடியாததுதான். ஆனால் மறைக்கக் கூடியதாச்சே!

*உங்களுக்குப் பிடிச்ச சண்டியர் யாரு?*

சண்டியர் யாரையும் பிடிக்காது. பிறகெப்படி பிடிச்ச சண்டியர்!

*ஔவை, அதியமானுக்குக் கொடுத்த மாதிரி ஒரு நெல்லிக் கனி கிடைச்சதுனா யாருக்குக் கொடுப்பீங்க?*

அடடா! அப்படியொண்ணு கிடைச்சா நானே சாப்பிட மாட்டேனா!

*ஒரு நாளைக்கு எத்தனைப் பொய் சொல்லுவீங்க?*

பொய் சொல்லாம இருக்க முடியாதுதான். யாரையும் ஏமாற்றவோ, தீங்கு விளைவிக்கவோ, பொய் சொல்ல மாட்டேன். அதிகமான தொல்லைகளில் இருந்து தப்பிக்க, சின்னச் சின்ன பொய் சொல்வேன்.

*நடிகை ஜோதிகாட்ட உங்களுக்குப் பிடிச்சது?*

ஜோதிகா நல்ல டான்ஸர் தெரியுமா? அவங்களோட முதல் படம்னு நினைக்கிறேன். சூர்யாவோட நடிச்ச படம். படம் பெயரு.... சாரி, ஞாபகத்துக்கு வரலை. அந்தப் படத்துல 'பூவப் பூவ பூவப் பூவ பூவே...!'ன்னு ஒரு 'சோலோ' பாட்டு வரும். என்ன நடனம் சார், அந்தப் பாட்டுல! நல்லா பண்ணியிருப்பாங்க. அவங்களோட டான்ஸ் எனக்குப் பிடிக்கும்.



*கண்களால் கைது செய்ய முடியுமா?*

கைது பண்ணி சிறையில் போடவும் முடியும்.

*சினிமால பாட்டாவா எழுதறாங்க?*

என்னத்த சொல்றது? சமூகப் பொறுப்பே இல்லாம எழுதறாங்க. இப்ப வர்ற அதிகப்படியான பாடல்கள் பாலுணர்வை மையப்படுத்திதான் வருது. 'சின்ன வீடா வரட்டுமா? பெரிய வீடா வரட்டுமா?'ன்னெல்லாம் எழுதறாங்க. காதல்ங்கறது மெல்லிய உணர்ச்சி. கட்டிப் பிடிச்சு உருள்றதா காதல்? 'வசீகரா' பாடல்ல




**ஜாலிகேள்விகள்: மொக்கராசு**

**படு ஜாலி பதில்கள்: கிருஷ்ணசாமி**

இருக்கிற காதல் மென்மையைப் பாருங்க. அது மாதிரி இருக்க வேண்டிய பாடல்கள் இன்னைக்கு திசை மாறிப் போய்ட்டிருக்கு. இதை யாரு கேக்க? பெண்கள் அமைப்புகள் ஒரு நாள் போராட்டம் நடத்தறதோட விட்டுடறாங்க. எழுதறவங்களும் பொறுப்போட எழுதணும்.



நகரத்துல 'ஹார்ட் அட்டாக்' பெருகிப் போச்சு. இதைக் குறைக்க என்ன பண்ண லாம்?

டென்ஷனைக் குறைக்கணும். எல்லாமே அவசரம் அவசரம்னு போயிட்டிருந்தா என்ன பண்ண முடியும்? நல்ல தூக்கம். கொழுப்பு அதிகமில்லாத உணவு, தண்ணி யடிக்கறது, தம்மடிக்கறதைக் குறைத்தல், தினமும் உடற்பயிற்சி, நடத்தல், (குறைந்தது தினமும் நான்கு கி.மீ. நடக்கணும்) இதெல் லாம் சரியா பண்ணினா மாரடைப்பு மாயமாகும்!

'முடி கொட்டு'துன்னு நிறையப் பெண்கள் வருத்தப்படறாங்க. 'சொட்டை விழுந்துடு'துன்னு ஆண்கள் கவலைப்படறாங்க. முடிக்கு ஏதாவது முடிவான தீர்வு சொல்லுங்களேன்!

இந்தியாவுல ஆணுக்கும் பெண்ணுக்கும் முடி முக்கியமான விஷயம். இளமையிலேயே முடி கொட்டிட்டா, வருத்தப்பட வேண்டிய விஷயம்தான். இதுக்கு இப்ப இருக்கற ஒரே வழி 'ஹேர் ட்ரான்ஸ்ப்ளான்டேஷன்'தான்; பரிபூரணமான மெத்தட்டாக அது இல்லைனாலும், வார்த் தெடுக்கப்பட வேண்டிய விஷயம்.

# பிடித்த சண்டியர்!

'மாஞ்சோலை'க்குப் போயிருக்கீங்களா?

ம்ம்... போயிருக்கேன். சின்ன வயசுல திருட்டு மாங்காய் பறிக்கறது ஒரு சுகம். நண்பர்களோட மாஞ்சோலைக்குப் போயி கல்லால மாங்காய் அடிச்சு மாட்டிக் கிட்டது கூட உண்டு.

ஞாபக மறதிக்கு ஒரு மாத்திரை ப்ளீஸ்?

ஞாபக சக்தி சிலபேருக்கு 'பர்த் கிப்ட்'. ஆனா பல பயிற்சிகள் மூலமா அதை வளர்த்தெடுக்க முடியும். மனத்தை ஒரு நிலைப் படுத்துதல்ல ஆரம்பிச்சு, அதிகரிக்க முடியும். மருந்து மாத்திரைகளில் ஞாபக சக்தியை அதிகரிக்க முடியாது. ஆனால் வல்லாரைக்கு அந்தச் சக்தி உண்டு.

புதுசா வந்திருக்கிற நடிகைகள்ல யாரை 'சூப்பர்'னு சொல்வீங்க?

சதா!

'நட்டாத்துல விட்டுட்டான்'னு ஒரு சொலவடை இருக்கு. அதுக்கு ஓர் உதார ணம் சொல்லுங்களேன்.

நம்பினவங்களைக் கழுத்தறுத்தாங்கங் கறதுதான் சரி. என்ன உதாரணம்? இப்ப நடந்த கூட்டணியை வச்சுக்கோங் களேன்!

படங்கள்: ஸ்ரீஹரி

# ஆ ஹா! ரூ. 10,000 பரிசு!



**போ**ட்டிக்குப் போட்டி கூடிக்கிட்டே போகுது கூப்பன். உங்க ஆர்வத்துக்கும் ஆதரவுக்கும் பாராட்டு, நன்றி! இது 15வது போட்டி. கலக்குங்க!

இலேசாத் தேடினாலே பதில் கிடைச்சிடுற சுலபமான ஜி.கே. கேள்விகள் தாங்க. படிங்க. புரிஞ்சிக்கிட்டு பதிலெழுதுங்க.

- எல்லாக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதற வாசகருக்கு ரூ.10,000 பரிசு!
- நிறையப்பேர் சரியான விடைகளை எழுதிட்டா,

## வாசகர்கள் அனைவருக்குமே

பரிசு குலுக்கல் முறையில்தான்.

- ஆறுதல் பரிசு 20 பேருக்கு. தலா ரூ. 100/-
- முதல் பரிசுத் தொகை வருமான வரி விதிமுறைகளுக்கு உட்பட்டது.
- உறையின் மேல் 'ஆஹா! ரூ.10,000 (15)' என்று கண்டிப்பா குறிப்பிடணும்.
- போட்டி தொடர்பாக விசாரணை எதுக்கும் அனுமதியில்லை.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.
- விடைகள் 28.2.2004க்கு முன்னால் வந்து சேரணும்.

## குவிஸ் போட்டி கூப்பன் - 15

1. 'சங்கீதக் கனவுகள்' நூலை எழுதிய தமிழ்த் திரைப்பட இசையமைப்பாளர் ..................

2. ஹார்மோனியத்தைக் கண்டுபிடித்தவர் ..................

3. அமெரிக்காவில் சுதந்திரதேவி சிலை நிறுவப்பட்டிருக்கும் தீவின் இப்போதையப் பெயர் ..................

4. இந்திய ஜனாதிபதிக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைப்பவர்..................

5. லாட்டரிச் சீட்டுத் திட்டத்தை இந்தியாவில் முதன் முதலில் நடத்திய மாநிலம் ..................

6. நடிகை சதாவின் முதல் தமிழ்ப் படம் ..................

பெயர் : ..................

முகவரி : ..................

..................

..................

கையொப்பம் : ..................

# கல்கி வழங்கும் கலக்கல் குவிஸ் போட்டி

# அஜீத் எஃப் 3 பேட்டி

"எந்த இலக்கும் அடைய முடியாததில்லை. அடைய முடியாம ஓர் இலக்கு இருந்தா, நாம இருந்து பயனில்லை, இன்னைக்குச் செவ்வாய்க் கிரகம் வரை போயிருக்கோமே!" தத்துவமாகப் பேசுகிறார் அஜீத். சமீபகாலமாக அவரது காதல் கார் ரேஸ் பக்கம் திரும்பியிருக்கிறது!

"சமீப காலமாக இல்லை. இந்த ஆசை சின்ன வயசுலேயே ஆரம்பமானதுதான். வாழ்க்கையில சேலஞ்ச் வேணும்னு நினைக்கறவன் நான். என்னுடைய சினிமா வாழ்க்கையும் ரேஸ் மாதிரிதான் அமைஞ்சிருக்கு. நிறையப் போராடியிருக்கேன். அந்தப் போராட்டத்துல தான் முன்னணி நடிகரா வளர முடிஞ்சது. இதோ இப்ப கார் ரேஸ்ல போராடப் போறேன். ரிஸ்க்தான். அதனாலென்ன, ரிஸ்க் இல்லாத வாழ்க்கை கிணற்றில் போட்ட கல் மாதிரி. அதுதான் முதல்லயே சொன்னேன், எந்த இலக்கும் அடைய முடியாததில்லைன்னு. அதுக்காக சினிமா அவ்ளோதானான்னு கேட்காதீங்க. சினிமா எனக்கு நிறையக் கொடுத்திருக்கு. பணம், புகழ், பெயர், என் வாழ்க்கைத் துணைவியை...! அதனால இதை விட முடியாது. வருஷத்துல கார் ரேஸ் சீசன் ஏப்ரல்லயிருந்து அக்டோபர் வரை. இந்தக் கால கட்டங்கள்ல கார் ரேஸ்லயும், மற்ற நாட்கள்ல சினிமாவுலயும் இறங்கலாம்னு முடிவு பண்ணிட்டேன். அதாவது வருஷத்துல இரண்டு படம். இதனால என்னை நம்பி முதலீடு செய்யற தயாரிப்பாளர்களுக்கு எந்தப் பிரச்சனையும் வராது." திறந்த மடையெனப் பேசிக் கொண்டே போகிறார் அஜீத்.

"கிரிக்கெட், டென்னிஸுக்கு இருக்கிற பாபுலாரிட்டி கார் ரேஸுக்கு இருக்காயென்ன?"

"இல்லைதான். அதுக்குப் பத்திரிகைகளும் ஒரு காரணம். இன்னும் இரண்டு வருஷத்துல கார் ரேஸுக்கு பார்வையாளர்கள் கிடைப்பாங்க. நான் பெருமைக்காகச் சொல்லலை. எனக்கு ஐம்பதாயிரம் ரசிகர் மன்றங்கள் இருக்கு. என் மன்றங்களைச் சேர்ந்தவங்க, 'நம்மாளு ஓட்டறார்டா'ன்னு



பார்க்க ஆரம்பிச்சாலே, இதுக்கு நிறையப் பார்வையாளர்கள் கிடைப்பாங்கன்னு நம்பறேன்" என்கிறார் இந்த ரேஸ்



நடிச்சேன்னா, எனக்குப் பணம் வந்துரும். ஆனா ரேஸ் எனக்கு உயிர். இதுல சாதிக்கணும். 'நம்பர் ஒன்'னா வரணும். இப்போதைய கவனமெல்லாம் அதுதான்.

"நான் இப்ப 'மாங்கோ ரேஸிங்' நிறுவனத்தோட ஒப்பந்தம் செய்திருக்கேன். இதை நடத்தறவர் உலகப் புகழ்பெற்ற பொறியாளர் பாட்ரிக் ராபர்ட்ஸ். பிரிட்டிஷ் எஃப் 3 பந்தயங்கள் இரண்டு பிரிவா இருக்கு. 'ஏ' பிரிவுல கலந்துக்கற கார்கள்ல எல்லாமே லேட்டஸ்ட்டா

# "என் வாழ்க்கையே போராட்டம்தான்!"

பிரியர்.

'மோட்டார் ஸ்போர்ட்ஸ் காஸ்ட்லி விஷயம். அஜீத் எப்படி சமாளிக்கிறார்?'

"கஷ்டம்தான். மோட்டார் ஸ்போர்ட்ஸை 'most of business, little sport'ன்னு சொல்வாங்க. கோடி கோடியா செலவழிக்க வேண்டியிருக்கும். ஸ்பான்சர்கள் இல்லாம நிச்சயமா முடியாது. ஸ்பான்ஸர்களை எதிர்பார்க்கிறேன். நான் ரேஸ் ஓட்டறது பணத்துக்காக அல்ல; இரண்டு படத்துக்குப் பதிலா நான்கு படத்துல

இருக்கும். நவீன டெக்னாலஜியைப் பயன்படுத்தியிருப்பாங்க. 'பி' பிரிவு கார்கள், இரண்டு வருஷம் பழைமையானது. நான் இதுலதான் கலந்துக்கப் போறேன். நல்ல ஸ்பான்ஸர்ஸ் கிடைச்சா எதிர்காலத்துல 'ஏ' பிரிவிலயும் பங்கேற்பேன்" என்கிற அஜீத், இதில் நிச்சயமாக முதலிடத்தைப் பிடிப்பேன் என்கிறார்!

— மிஸ்டர் லீ



• கவிஞர் போல...!



• சமநோக்குச் செல்வம்!

● டி.கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்

? டோட்டல் சரண்டர் என்றால் என்ன அர்த்தம்?

! 'ஸ்டிரைக்கா பண்ணுகிறாய், விட்டேனா பார்!' என்று வரிந்து கட்டிக் கொண்டு, சட்டத்தையே திருத்தி பணி நீக்கம் செய்தவர்கள், தேர்தல் என்று வந்ததுமே மன்னிப்போம் மறப்போம் என்று பேச்சு மாறுவது.

● வி. லக்ஷ்மணன், கும்பகோணம்

? பக்கம் பக்கமாகச் சாதனை விளம்பரங்களை நடுவண் அரசு வெளியிடுவது சரியா...?

! சரியில்லைன்னு நான் சொன்னாலோ, நீங்க சொன்னாலோ, கிடக்குதுன்னலாம். தேர்தல் ஆணையரே சொல்றார்... அப்பவும் அந்த நடுவண் அரசு 'வன்' அரசாக வன்மத்தோடு அந்த அநீதியைத் தொடர்கிறதே! இந்த நாட்டுக்கு கதி மோட்சமே கிடையாது சாமி!

• பழகம்...



● வி. முத்தையா, திருநெல்வேலி

? போஃபர்ஸ் ஊழலில் ராஜீவ் காந்திக்குத் தொடர்பு இல்லை என்று உச்சநீதி மன்றம் தீர்ப்பு வழங்கி விட்டது. ஆனால் அவர் புகழுக்குக் கற்பிக்கப்பட்ட களங்கம்..?

! கொஞ்சம் பொறுங்க... போஃபர்ஸ் பீரங்கி வாங்கியதில் ஊழல் நடந்திருப்பதை நீதிமன்றம் மறுக்கவில்லை. ராஜீவ் ஆதாயம் அடைந்தார் என்பதற்கு ஆதாரம் காட்டப்படவில்லை என்றுதான் கூறியிருக்கிறது. எவ்வாறாயினும், தார்மிகப் பொறுப்பைத் தட்டிக் கழிக்க முடியாது.

● ஆர். விஸ்வநாதன், சென்னை - 4

? தேர்தலைக் காரணம் காட்டி எந்த வளர்ச்சித் திட்டம் நடைபெற்றாலும் அது மக்களைத்தானே சென்றடைகிறது. பின் பத்திரிகைகள் இதை ஏன் குறை சொல்கின்றன?

! மூன்று காரணங்கள்: தேர்தல் நெருக்கத்தில் அள்ளித் தெளித்த அவசரக் கோலமாக அறிவிக்கப்படும் பல திட்டங்கள், நிறைவேறுவதே இல்லை; அப்படி நிறைவேறினாலும் அவை நிரந்தரப் பயன் தரும் விதத்தில் சீரான முறையில் நிறைவேறுவதில்லை; வரிப்பணத்தை அள்ளிவிட்டு வாக்காளர்களைக் கவரும் வாய்ப்பு எதிர்க் கட்சியினருக்கு இல்லை. ஆகவே மூன்று வகையில் அதர்மம்.

• ...ரொம்பப் பழகம்..!



● ஔவை ஏ.எஸ். யோகானந்தம், கலிங்கியம்

? வனத்துறை மற்றும் சுற்றுச் சூழலுக்கான புதிய அமைச்சர் ரமேஷ் பயஸ், 'வீரப்பனைப் பிடிக்க என்ன ஏற்பாடு?' என்று நிருபர்கள் கேட்க, "யார் வீரப்பன்? நான் பதவி ஏற்று பதினைந்து நாட்கள்

# 'டோட்டல் சரண்டர்

ஆகின்றன; எனக்கு ஒன்றும் தெரியாது...'' என்று கூறினாரே?

! பரவால்லை; 'இதோ பிடிச்சாச்சு, சுத்தி வளைச்சுட்டோம்'னெல்லாம் கொட்டி முழங்கறவங்களைப் பார்க்க, இவர் ரொம்ப நேர்மையானவர்.

● தமிழருவி, குடந்தை - 5. ❑

? படித்தவர்களுக்கு மட்டும்தான் வோட்டுரிமை என்றால் இந்தியா ஒளி வீசும் அல்லவா...?

! இல்லை; அது பாரபட்சம். படிக்காதவர்களுக்கும் பட்டறிவும் நிகழ்வுகளை எடைபோடும் திறனும் உண்டு என்பதை

மறுக்கும் அந்த நிலை, ஜனநாயக விரோத மானது. 'It will result in tyrrany of the intelligentia' என்றார் காந்திஜி.

● பறம்பை இரா. சு. பிரகாசம், திருச்சி

? கனவு என்பது தானாகவே வருவது... நாமாகக் காண இயலாது. இவ்வாறிருக்க, 'கனவு காணுங்கள்' என்று அப்துல் கலாம் சொல்வது பொருந்தி வரவில்லையே?...

! பாரதி, சுதந்திர இந்தியாவைக் கனவு கண்டு பாடவில்லை...? ஆண்டாள், அரங் கனைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள கனவு காணவில்லை...? அவை கை கூடா மலா போய்விட்டன? அதுபோல் கலாமின் 'இலட்சிய இந்தியக் கனவு'ம் நிறைவேறும் - ஒவ்வொரு இந்தியனும் சிந்திக்கவும் உழைக்கவும் கற்றுக் கொண்டால்.

● மல்லிகை மன்னன், மதுரை - 17

? "தொகுதிப் பங்கீடு என்னும் பிரசவ வலியால் துடிதுடித்துப் போன எங் களுக்கு, உடன்பாடு என்னும் குழந்தை பிறந்தவுடன் மகிழ்ச்சி அடைந்து விட் டோம்" என்கிறாரே கருணாநிதி?

! குழந்தை பிறந்து விட்டது... ஆனால் சிசேரியன். கள்ளிப்பாலுடன் காத்திருப் பவர்களும் இருக்கிறார்கள். கவனம் தேவை.

● பி.எஸ். மணியன், சென்னை - 80

? இந்தோ-பாக் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வுகாண முடியுமா?

! முடியும், காஷ்மீர் மக்களின் மெய்யான உணர்வுகள் என்ன என்பதையும் புரிந்து

# ...ன்றால் என்ன...?

கொள்ள, இந்தியா - பாக் - தீவிரவாதிகள் ஆகிய முத்தரப்பினரும் முயற்சி எடுத்து, அந்த உணர்வுகளுக்கு மதிப்பளிக்கவும் தயாரானால்! இப்போது முத்தரப்பினரும் டயலாக் பேசி நாடகமாடிக் கொண்டி ருக்கிறார்களே தவிர வேறில்லை.

● பி. கவிதாபூபதி, நாமகிரிப்பேட்டை

? தேர்தல் வாக் குறுதிகள் எப்படிப் பட்டன?...

! வாக்கு 'உதிரி'கள்!


• 'வன்' அரசு!


• பீரங்கிப் பொறுப்பு

● எஸ்.கே. மூர்த்தி, கும்பகோணம்

? பி.ஜே.பியிடம் அ.தி.மு.க. பாடம் கற்கப் போகிறதா, அல்லது அ.தி. மு.கவிடம் பி.ஜே.பி. பாடம் கற்கப் போகிறதா...?

! பா.ஜ.கவுக்கு அ.தி.மு.க. பெஞ்சு மேல் ஏற்றி வைத்துப் பாடம் புகட்டப் போகிறது!

● குவளை எழில், சென்னை - 92. *

? என்னதான் கலைஞருடன் வைகோ சேர்ந்தாலும் பழைய கசப்பான நிகழ்வு கள் இருவருக்கும் அடிமனத்தில் இருக் கத்தானே செய்யும்?...

! பழைய கசப்புகள்தானா...? பழைய அன்பும் விசுவாசமும் கூட உண்டே... அவை கிளர்ந்தெழும் என நம்புவோம்...!

● ஆர். சாலமன் ஜெபராஜ், ஆலங்குளம்

? ராமர் கோயில் கட்டியே தீருவோம் என்கிறாரே வாஜ்பாய்...?

! தேர்தல் கால உ.பி. பிராண்ட் டயலாக் அது. கூடவே பேச்சுவார்த்தைகள் மூலம் தான் பிரச்னை தீரும் என்கிறார். மறுநாளே டெல்லியில் அத்வானி இரு தரப்பினர் ஒப்புதலுடன் ராமர் கோயில் கட்டுவோம் என்று அடக்கி வாசிக்கிறார். இப்படி இரு தரப்பினரையும் வோட்டுக்காகத் திருப்திப் படுத்தப் பார்க்கிறார்கள். ஆனால், அவர் களின் உண்மை நோக்கம், மூன்றிலிரண்டு பங்கு மெஜாரிட்டி கேட்கிறார் களே, அதில் அடங்கியிருக் கிறது!

□ ரூ. 100/- பரிசு பெறுபவர்:

ஆர். தமிழருவி,
தெற்குத் தெரு,
புதூர் அஞ்சல்,
குடந்தை - 612 205.

* ரூ. 50/- பரிசு பெறுபவர்:

குவளை எழில்,
Plot 73, கதவு எண் - 20,
SBI காலனி 3வது தெரு,
விருகம்பாக்கம்,
சென்னை - 600 092.

ஆனந்தி

# வெற்றி தரும் வராஹ மூர்த்தி

பூமாதேவியைத் தன் இரு நீண்டு வளைந்த பற்களில் தூக்கிக் கொண்டு, பிரளயக் கடலிலிருந்து எழுகின்ற பிரும்மாண்டமான வராஹ மூர்த்தியைக் கற்பனை செய்து கொண்டாலே வியப்பாக இருக்கிறது.

சிலம்பு முதல் கலன் அணிந்தோர்
செங்கண்குன்றம்
திகழ்ந்ததெனத் திருவுருவம் பன்றியாகி
இலங்கு புவி மடந்தைதனை
இடந்துப் புல்கி
எயிற்றிடைவைத் தருளிய எம்
ஈசன் காண்மின்

என்று திருமங்கையாழ்வார் வராஹ அவதாரத்தை வியக்கிறார். எயிறு = பற்கள்.

பெரியாழ்வாரோ,

"வென்றி சேர் திண்மை விலங்கல்
மா மேனி
வெள் எயிற்று ஒள் எரித் தறுகண்
பன்றியாய் அன்று பார் மகள் பயலை
தீர்த்தவன் பஞ்சவர் பாகன்"

என்று விலங்கு உருவமெடுத்து, வெண் நிறப் பற்களும் தணல் போல் ஒளிரும் கண்களும் உடைய, மலை போன்ற பன்றி உருவந்தாங்கிய பகவானை வியந்து பாடுகிறார். ஸ்ரீமந் நாராயணனை நம்பியவர்கள் நிச்சயம் வெற்றியடைவார்கள் என்பதால், 'வென்றி சேர்' என்றே தொடங்கி விட்டார் பாடலை. பக்தர்களின் வெற்றி, பெருமாளின் வெற்றிதானே!

திருமுட்டம் என்ற தமிழ்ப் பெயருடைய ஸ்ரீமுஷ்ணம், விருத்தாசலம் அருகே உள்ள நடுநாட்டுத்தலம்.

கோல மலர்ப் பாவைக்கு
அன்பாகிய என் அன்பேயோ!
நீல வரை இரண்டு பிறை கவ்வி
நிமிர்ந்த தொப்ப
கோல வராக மொன்றாய் நிலம்
கோட்டிடைக் கொண்ட எந்தாய்
நீலக் கடல் கடைந்தாய்! உன்னைப்
பெற்று இனிப் போக்குவனோ?
(நம்மாழ்வார்)

"தாமரையில் வீற்றிருக்கும் தேவியின் அன்பனான அன்பனே!' என்று அழைத்து (என்ன உரிமை!) நீல மலைமீது இரண்டு பிறைகள் தோன்றினால் எப்படி இருக்கும்? அப்படி இரண்டு பிறைகளால் நிலத்தை அகழ்ந்து, கொம்பின் மீது தாங்கிக் காப்பாற்றிய என் அப்பனே! கடல் கடைந்த உன்னை அடைந்தேன். இனிமேல் விட்டு விடுவேனா என்ன?" என்று உரிமையும், பிரியமும், மகிழ்ச்சியும், சற்று நகைச்சுவையும் கலந்து பகவானிடம் பேசுகிறார் ஆழ்வார்.

ஸ்ரீ முஷ்ணத்தில் மனித உருவத்துடனும் காட்டுப் பன்றி முகத்துடனும் காட்சி தருபவர் நீலவராஹர். இவர் ஸாளக்ராமத்தால் ஆனவராம். நான்கு காலம் அபிஷேகம் செய்வார்களாம். பட்டர் சொன்னார், "மூலவர் நீல வராஹன், உற்சவர் யக்ஞ வராஹன். பூமி நாச்சியாருடன் இருப்பதால் பூவராகன் என்றும் பெயர். தாயார் பகவானிடம், 'பன்றியைக் கல்யாணம் செய்து கொண்டாயே என்று பரிகாசம் பண்ணுவார்களே' என்று சொன்னதால், அழகிய மங்கள ரூபத்

துடன், ஸ்ரீ தேவி பூ தேவி சமேதராகக் காட்சி தருகிறார். இன்னும் இரண்டு வித வராஹ மூர்த்திகள்; கோல வராஹர், ச்வேத வராஹர். ஆகக் கூடி ஐந்துவிதமான வராஹ மூர்த்திகள் உண்டாம்.

ஸ்ரீ முஷ்ண க்ஷேத்திரம் விருத்தாசலத்துக்கு அருகே இருபது கி.மீட்டரில் இருக்கிறது. ஏகப்பட்ட கல்வெட்டுகள் உள்ள கோயில். நாயக்க அரசர்களின் திருப்பணி.

டெல்லி பாதுஷாவின் மந்திரி, தோடர்மாலின் காலத்தில் திண்டிவனத்தில் வாழ்ந்த சீனிவாச தாஸர் என்பவர், தில்லி பாதுஷாவான பருஷியாரின் நன்மையை முன்னிட்டு, செஞ்சி பிராந்தியத்தில் இருந்த ஐந்து கிராமங்களை ஸ்ரீ முஷ்ணம் ஆதி வராஹசுவாமி கோவிலுக்கு நிவந்தமாக அளித்தாராம்.

கோவில் அழகாக நிர்வகிக்கப் பட்டு வருகிறது. நடு நாட்டில் பல கோவில்களுக்கு ராம்கோ சிமெண்ட் கம்பெனியார் கைங்கர்யம் செய்திருக்கிறார்கள். இந்தக் கோவி



லுக்கும் கோபுரக் கைங்கர்யம் செய்திருக்கிறார்கள்.

மத நல்லிணக்கத்தை உறுதிப்படுத்தும் கோயில் இது என்பதனாலேயே ஒரு மகிழ்ச்சி ஏற்படுகிறது.

மாசி மாதத்தில் கடற்கரைக்கு சுவாமியை எழுந்தருளச் செய்து, கிள்ளையில் தீர்த்த வாரி நடத்தி விட்டுப் பல கிராமங்கள் வழியாக வந்து, உபசாரங்களை ஏற்றுக் கொண்டு திரும்புவார்கள். கடற்கரைக்குப் போகும் போது தைக்கால் என்ற கிராமத்தில், ஒரு முஸ்லிம் மஹான் அடக்கம் செய்யப்பட்ட இடத்துக்கு எதிரில் பல்லக்கை நிறுத்துவார்கள். அந்த முஸ்லிம் மகான் ஹஸரத் சையத் ரஹமத்துல்லாஹ் ஷுத்தார் சமாதிக்கு மரியாதை செலுத்திவிட்டு, பாத்தியா ஓதுவார்களாம். அதே போலத் திரும்பி வரும்போதும், அதே இடத்தில் வாண வேடிக்கைகள் நடத்துவார்கள். தர்க்கா டிரஸ்டியின் உத்தரவு பெற்று அங்கிருந்து கிளம்புவார்களாம்.

தமிழிலக்கியத்தில் அம்மானைப் பாட்டு என்று ஒரு கவிதை வடிவம். அம்மானையைத் தூக்கிப் போட்டு ஆடிக் கொண்டே, கேள்வி கேட்டுப் பதிலும் சொல்ல வேண்டும். பதில் சொல்லக் கணம் தாமதமானால், அம்மானை மீது கவனம் போய்விடும்.

இரட்டைப் புலவர்கள் பாடிய ஓர் அம்மானைப் பாட்டு வெகு சுவாரஸ்யமாக இருக்கிறது.

கேள்வி :

தெள்ளு புகழ் படைத்தத் திருமுட்டத்
தெம்பெருமான்
உள்ள நிலமெல்லாம் உழுதுண்டார்
அம்மானை
உள்ள நிலமெல்லாம் உழுதுண்டா
ராமாயின்
கள்வனென்று சொல்லிக் கட்டுவதேன்
அம்மானை?

பதிலைப் பார்க்கலாம். ஓர் அடிதான்.

கட்டாரோ? போரில் கதிர் மறைத்தால்
அம்மானை!

பகவானை உரலில் கயிற்றால் கட்டினாள் யசோதை. தொண்டர்கள் தங்கள் அன்பினால் கட்டி விடுகிறார்கள்.

பாரதப் போரில் சக்ராயுதத்தால் சூரியனை மறைத்துக் கபடநாடகம் ஆடினாரே! அவரை ஏன் கள்வன் என்று சொல்லக் கூடாது? ஏன் கட்டிப் போடக் கூடாது?

கோபுர வாசலில் சில படிக்கட்டுகள் உள்ளன. வயதானவர்கள் சற்று சிரமப்பட்டுத்தான் ஏற வேண்டும். அங்கே கோபுரத்தின் முதல் நிலையில் ஸ்ரீநிவாஸர் நின்று, தன் பூர்வ அவதாரமான ஆதிவராஹரைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். அவரையும் ஸ்ரீபாதத்தையும் தரிசித்து விட்டுத்தான் உள்ளே செல்கிறார்கள். இது இந்தக் கோயிலின் தனியொரு சம்பிரதாயம்.

புருஷ ஸூக்த மண்டபத்தைப் பல மணி நேரம் பார்க்கலாம். அவ்வளவு வேலைப்பாடுகள். இங்குதான் புருஷ ஸூக்தம் ஓதுவார்களாம்.

தாயார் சன்னதி, ஊஞ்சல் மண்டபத்தை ஒட்டி இருக்கிறது. அம்புஜவல்லி என்ற அழகான திருப்பெயர். நம் இதயத் தாமரையிலும் வீற்றிருந்து நலம் அருள்கிறாள்.

கடைசியாகக் குழந்தை அம்மன் கோயிலை அடைகிறோம். ஸப்தமாதாக்களும் அம்புஜ வல்லித் தாயாரின் தோழிகளாம். குழந்தை அம்மனுக்கு முக்கியத்துவம் தரப்படுகிறது. கல்யாணம் நிச்சயம் செய்வதற்கு இந்த அம்மனிடம் வருகிறார்கள். அம்மனிடம் உத்தரவு வாங்கிக் கொண்டு நிச்சயம் செய்கிறார்கள். பக்கத்தில் உள்ள மரத்திலிருந்து கௌளி சொன்னால், அம்மன் அனுமதி கொடுத்ததாக எடுத்துக் கொள்கிறார்கள்.

வெள்ளாறு பாய்ந்து கொண்டிருந்த பிரதேசம். இன்று தண்ணீரைக் காணோம். ஆனாலும் பயிர்கள் பசுமையாக இருக்கின்றன. பூவராஹனும், பூமி தேவியும் குடிகொண்டுள்ள தலம் வளமுடையதாகத்தானே இருக்கும்!

(தொடரும்)

"அந்தக் கார்ல வலப்பக்கமும் சிக்னல் தெரியுது. இடப்பக்கமும் சிக்னல் தெரியுதே..."

"அது அரசியல்வாதியோட காரராச்சே! எங்கே திரும்பணும்னு கடைசி நேரத்துலதான் முடிவெடுப்பார்!"

- அம்பை தேவா



# ஆரம்பிச்சுட்டாங்கய்யா!

• மத்திய அரசின் சாதனை விளம்பரங்களைப் பற்றிய காங்கிரஸ் குற்றச்சாட்டை, லாகவமாக வாஜ்பாய் மறுத்ததைத் தொடர்ந்து அத்வானியும் ஒரு கருத்தைக் கூறியுள்ளார். "எப்படியாவது ஆட்சியைப் பிடிக்க மிகவும் பொறுப்பற்ற முறையில் நடந்து கொள்ளும் காங்கிரஸ், தாங்கள் ஆட்சியில் இல்லை என்பதையும் மறந்து விடுகிறார்கள்'' . இப்படியொரு ஏடாகூடமான ஸ்டேட்மெண்ட்டை The Pioneer.com-ல் தெரிவித்ததன் மூலம், தேர்தல் பிரசாரம் துவங்கிவிட்டது தெரிகிறது.



• நடிகை மனிஷா கொய்ராலாவின் இந்தி(ய) சினிமா சாதனையைப் பாராட்டும் விதமாக நேபாள நாட்டில் நட்சத்திர விழா ஒன்றுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அடர்ந்த சிவப்பு ரவிக்கையும், தங்கச் சரிகை பார்டர் கொண்ட வெண்ணிறப் புடைவையில் மேடைக்கு வந்து பார்வையாளர்களை அசத்தினார் அவர். மன்னர் ஞானேந்திராவின் புகழாரத்தால், புன்னகை மாறாமல் கடைசிவரை வீற்றிருந்தாராம். அதே நேரத்தில் விழா விருந்தினரான பாடல் உதித் நாராயணனைக் குறிப்பிட்டு, நேபாளியல்லாத ஒருவரின் வருகைதான் இந்த விழாவுக்கு மணிமகுடம் என்று மன்னர் பேசப் பேச, முகம் கடுகடுப்பாக மாறியது கிரிஜா பிரசாத் கொய்ராலாவுக்குத் தான் என்று, calcattaonline.com கட்டம் போட்டு எழுதியிருக்கிறது.

• 25 வருடத்தில் 100 முறை உலகைச் சுற்றி வந்த wildernesstravel.com தன் வெள்ளி விழாவைக் கொண்டாடும் நிமித்தமாக, மிகக் குறைந்த செலவில் சுற்றுலாப் பயணிகளை உலகம் முழுவதும் சுற்றிக் காட்ட முன் வந்திருக்கிறது. ஒவ்வொரு கண்டத்திலும் உள்ள முக்கியமான நாடுகள், எல்லாவற்றிலும் உள்ள அதிசயங்கள், முக்கிய இடங்களுக்குத் தவறாமல் அழைத்துச் சென்று காட்டப்படுமாம். இந்த அரிய வாய்ப்பில் நீங்கள் கலந்து கொண்டு, ஜாலியாய் ஒரு ட்ரிப் உலகை வலம் வரலாமே. சரி, அந்த குறைந்த செலவுதான் எவ்வளவு என்று கேட்கிறீர்களா? தலைக்கு 2595 டாலர்தாங்க!

- பால்நிலவன்



## வலைபாயுதே!

மாண்புமிகு டாப் டென் - 1
போட்டி முடிவு

# வாஜ்பாய் பெற்றது 42/100





• மணா

தேர்தல் சுயம்வரம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. தங்கள் நாயகனைத் தேர்ந்தெடுக்கும் பணி மக்களுக்கு. தலைவர்களைப் பற்றிய மக்களின் கணிப்பு எப்படி இருக்கிறது என்று பார்க்கத்தான் 'மார்க் போடு தலைவா!'

முதல் மாண்புமிகு - ஏ.பி. வாஜ்பாய்.

பத்திரிகையாளர் மணாவின் கணிப்புக்கு வெகு அருகில் மார்க் போட்டுக் கணித்த வாசகர் :

| | போட்ட மார்க் |
|---|---|
| தேவ.ஜெயகுமார், கன்னியாகுமரி | 41 |

**மணா கொடுத்த மார்க் - 42 / 100**

மிக நெருக்கமாகக் கணித்த ஜெயகுமாருக்கு டிக்கெட் கொடுக்கிறோம். அட, நாலு சினிமா டிக்கெட்தாங்க!

வாஜ்பாய்க்கு 88, 95, 100 என்றெல்லாம் மதிப்பெண்கள் வாரி வழங்கிய வள்ளல்களுக்கு நன்றி!

**பத்திரிகையாளர் மணாவின் கணிப்பு :**

| | தகுதி | முழு மதிப்பெண் | வாஜ்பாய் பெற்றது |
|---|---|---|---|
| 1. | தலைமைப் பண்பு (லீடர்ஷிப் குவாலிடி, வசீகரம்) | 10 | 5 |
| 2. | முடிவெடுக்கும் திறன் | 10 | 3 |
| 3. | கறைபடாத கரங்கள் | 10 | 5 |
| 4. | அரசியல் சாணக்கியம் | 10 | 2 |
| 5. | மனித நேயம் | 10 | 4 |
| 6. | தொண்டர்களோடு தோழமை | 10 | 3 |
| 7. | மேடைப் பேச்சு | 10 | 5 |
| 8. | மாற்றுக் கட்சியினரை மதிக்கும் போக்கு | 10 | 6 |
| 9. | தனிமனித ஒழுக்கம் | 10 | 6 |
| 10. | நிர்வாகத் திறமை | 10 | 3 |
| | மொத்தம் | 100 | 42 |

